# 'ஜெ' பாணியில் சிவசேனா தலைவர்!



• தாக்கரே

## கடத்தல் மர்மம்!

**பி**ரபல வைர வியாபாரி நிரஞ்சன் ஷாவின் மகனான எட்டு வயது சிறுவன் வந்சல் ஷா, சமீபத்தில் கடத்தப்பட்டான். அவன் பள்ளிக்கு எடுத்துச் சென்றிருந்த பையில் இருந்த ஒரு காகிதத்தில், அவனது உயிரின் விலையாகப் பதினைந்து கோடி ரூபாய் பெறுமான வைரம் மற்றும் ஐந்து கிலோ தங்கம் கேட்கப்பட்டுள்ளது. நிரஞ்சன் ஷா, ஹர்ஷத் மேத்தாவின் ஒரு முக்கிய கை என்று கருதப்படுகிறவர். இரண்டு வருடம் முன்பு விவாகரத்து வாங்கிய இவர், பங்கு மார்க்கெட் ஊழல் வெளியான தினத்திலிருந்து காணவில்லை! துபாயில் ஒளிந்து கொண்டிருப்பதாக சி.பி.ஐ. கருதுகிறது. இந்தச் சிறுவனின் கடத்தல் நிஜமா அல்லது ஒரு செட்டப்பா என்றும் சந்தேகம் எழுப்பப்பட்டுள்ளது!

## டாக்டர் VS பேஷண்ட்!

**நு**கர்வோர் பாதுகாப்புக் குழுக்களுக்குத் தீர்ப்பு வழங்கும் உரிமை கொடுக்கப்பட்டதிலிருந்து ஒரு சர்ச்சை கிளம்பியுள்ளது. நோயாளிகள் நுகர்வோர்களா? டாக்டர்கள் தவறு செய்தால், அவர்களை நுகர்வோர் நீதிமன்றம் தண்டிக்க இயலுமா? இரு தரப்பிலுமே வாதங்கள் செய்ய முடியும். அண்மையில், 'பாண்டுப்' குடிசைப் பகுதியில் வசிக்கும் சந்தீப் காவ்டே என்ற எட்டு வயதுச் சிறுவனின் இடது காலை வெட்ட வேண்டிய 'ராஜவாடி' ஆஸ்பத்திரி டாக்டர், தவறுதலாக நன்றாக இருந்த வலது காலை வெட்டி விட்டார்! இப்போது இரு கால்களையும் இழந்து தவிக்கும் இச் சிறுவனின் பரிதாப நிலையைக் கேள்விப்பட்ட எல்லோருமே நோயாளிகள் நுகர்வோராகக் கருதப்படலாம் என ஒப்புக் கொண்டு, வழக்கை நுகர்வோர் கோர்ட்டுக்கு எடுத்துச் செல்ல வலியுறுத்துகிறார்கள்!



## விலைமதிப்பற்ற புத்தகம்!

**கு**ழந்தை இல்லாப் பெற்றோர் பலபேருக்கு தத்து எடுத்துக் கொள்வதில் ஆர்வம் இருக்கும். ஆனால் பெரும்பான்மையினருக்கு அதன் சரியான வழிமுறைகள் தெரியாமல் இருக்கலாம். பம்பாயைச் சேர்ந்த நீலிமா மேத்தா பதினைந்து வருடங்களாக இத் துறையில் உழைத்து வருகிறார். இம் மாதம் அவர் 'Ours by Choice' என்ற புத்தகத்தை யூனிசெஃப் உதவியுடன் வெளியிட்டிருக்கிறார். இந்தப் புத்தகத்திற்கு எந்த விலையும் குறிக்கப்படவில்லை. வாங்குவோர் கொடுக்கும் பணம், தத்து எடுத்தல் பற்றிய ஆராய்ச்சிக்குச் செலவிடப்படும்.

## 'ஹே, ராம்!'

**ரா**ம நாமத்தை ஜெபிப்பதால் புண்ணியம் கிடைக்குமோ இல்லையோ, நூறு ரூபாய் அபராதம் கட்ட வேண்டி வரும் என்று யாரும் கனவில் கூட நினைத்துப் பார்த்திருக்க மாட்டார்கள்!

சென்ற மாதம் தானே கோர்ட்டில் கேஸ் நடந்து கொண்டிருந்த போது, 'ஸ்ரீராம், ஸ்ரீராம்' என்று உரக்கக் கூறிய மதுகர் தேஷ்முக் என்பவருக்கு, நீதிபதி பி.என்.வாக்

• சந்தீப்

கோர்ட் நடவடிக்கைகளுக்கு இடையூறு செய்ததாகக் கருதி நூறு ரூபாய் அபராதம் அல்லது பதினைந்து நாட்கள் சிறைவாசம் விதித்தார். இதைத் தொடர்ந்து சுற்றி வசிக்கும் சில ஆதிவாசிகள் போராடத் தொடங்கியுள்ளனர். சிவசேனா, பா.ஜ.க. மற்றும் விச்வ ஹிந்து பரிஷத் ஆகியவையும் களத்தில் குதித்துள்ளன. ஒரு குட்டி அயோத்தி போல் கொந்தளிப்பு!

### சைக்கிளில் சாதனை!

டில்லியிலிருந்து பம்பாய்க்கு சைக்கிளிலேயே வந்தவரைக் காண விரும்பி, ஜூலை பதினைந்தாம் தேதியன்று மக்கள் திரண்டு சென்றனர். அவர்களது வியப்பு இரட்டிப்பானது. காரணம் : இந்தச் சாதனையைப் புரிந்தவர் - ஏழே வயது நிரம்பிய 'சன்னி சாஸ்திரி' தன் தந்தை மற்றும் குடும்ப நண்பர் ஒருவருடன் பம்பாய் வந்த சாஸ்திரி, இச் சாதனை மூலம் திரட்டிய, 1,51,501 ரூபாயை இந்தியப் பார்வையிழந்தோர் சங்கத்திற்கு நன்கொடையாக வழங்கியுள்ளான்! வழியில் ஏதேனும் கஷ்டம் ஏற்பட்டதா என்ற கேள்விக்கு 'பெரிய கஷ்டம் ஒன்றுமில்லை. எனக்குப் பிடித்த ஃப்ரூட்டி தான் சில இடங்களில் கிடைக்கவில்லை' என்று குழந்தைத்தனமாகப் பதிலளித்தான் இச் சிறுவன்!

### தாக்கரேயின் அதிரடி

ஜெயலலிதா போலவே அதிர்ச்சி வைத்தியம் செய்ய, சிவசேனாவின் தலைவர் பால் தாக்கரே, தாம் தமது குடும்பத்தாரோடு சிவசேனாவிலிருந்து விலகுவதாக அறிவித்திருந்தார்! சிவசேனாவின் எழுச்சிக்கு ஆரம்ப காலத்தில் உறுதுணையாக இருந்த மாதவ் தேஷ்பாண்டே, 'கட்சியில் ஜனநாயகம் அறவே இல்லாமல், குடும்பக் கட்சியாக சிவசேனா செயல்படுகிறது', என்று குற்றம்சாட்டியதே தாக்கரேயின் திடீர் பயமுறுத்தலுக்குக் காரணம். கட்சியின் பிரபலங்கள் மற்றும் ஆயிரக்கணக்கான தொண்டர்கள் இதனால் மிகவும் அதிர்ச்சியடைந்து பால்தாக்கரேயின் வீட்டுக்கு விரைந்தனர். இவர்களது தர்ணா மற்றும் அன்புக் கோரிக்கைக்கு இணங்கி பால் தாக்கரே 'பல்டி' அடித்து விட்டார்.

- அம்ருதா பார்த்தசாரதி

## ஒரு வாஷிங் மெஷின் வருத்தப்படுகிறது!

'எங்கள் வீட்டிலும் வாஷிங் மெஷின் இருக்கிறது' என்று பீற்றிக் கொள்ளும் குடும்பத் தலைவிகள் இப்போது ஏராளம். ஏதோ வாங்கி விடுகிறார்கள். உபயோகிக்கிறார்கள். ஆனால் என் பெருமை அறிந்து செயல்படுவோர் எத்தனை பேர்? இதோ இந்த வீட்டுத் தலைவி என்னை உபயோகிக்கும் நேரம் தவிர மற்ற சமயங்களில் ஒரு ஸ்டாண்டாகவும் பயன்படுத்துகிறாள். துணிகளை மெஷினில் போடும் முன் சட்டைப் பைகளில் என்ன இருக்கிறதென்று பார்ப்பதே இல்லை. வீட்டுத் தலைவர் பஸ்ஸிற்குக் கொண்டு போன சில்லறையில் மீதி, வீட்டு அம்மாவின் கொண்டை ஊசி, ஏன் சாவி கூட இருந்திருக்கிறது. குழந்தைகளின் சாக்ஸ், கைக்குட்டைகள் எல்லாவற்றையும் சிறியது, பெரியது என்று பாரபட்சமின்றி சகட்டுமேனிக்கு என்னுள் கொட்டி நிரப்புகிறார்கள். இவற்றை ஒரு பை அல்லது தலையணை உறையில் போட்டுக் கட்டி உள்ளே போட்டால் சிக்கல் இருக்காதே. துணி போடும் அறையின் கதவு திறந்திருக்கும் போது ஸ்விட்சைப் போடுவோரும் உண்டு. சில அவசரக் குடுக்கைகளுக்குச் சில நிமிடம் கூடப் பொறுக்க முடியாது. ஸ்விட்சை ஆஃப் செய்தவுடனேயே கதவைத் திறந்தாக வேண்டும். மேலும் சிலர் உள்ளே போடும் துணிகளில் பொத்தான் போடுவது, ஜிப்பை இழுத்து மூடுவது போன்ற சில்லறை சமாசாரங்களை செய்ய மறந்து விட்டு, கழற்சியில் துணிகள் மாட்டிக் கிழிந்தால், கூசாமல் என் மேல் பழியைப் போடுகிறார்கள்! 'இந்த மெஷின் ரொம்ப மோசம்' என்று எனக்கு அவப்பெயர்! கொஞ்சம் யோசித்துச் செயல்படுங்கள். உங்கள் வேலை பளுவும் குறையும், என் ஆயுளும் அதிகரிக்கும்!

- கிருஷ்ணவேணி ரங்கநாதன்



# சசிகலாவின் அண்ணன் எழுதுகிறார்

“கல்கி” 28.6.92 இதழைப் பார்த்து அதிர்ச்சி அடைந்தேன். ”ஜெ. ஆட்சியின் ஓராண்டுச் சா(வே)தனை” என்ற தலைப்பில் வெளியாகியுள்ள கட்டுரையில், ”வாழியே! வா! வா!” என்ற துணைத் தலைப்பில் பிரசுரமாகி உள்ள பத்தியில் ”சசிகலாவின் அண்ணன் டாக்டர் வினோதகன் 37 லட்சம் செலவில் தஞ்சையில் ஒரு தனியார் ஆஸ்பத்திரி துவங்கியிருக்கிறார்; திருத்துறைப்பூண்டியில் ஒரு கோடி செலவில் திருமண மண்டபம் கட்டுகிறார் சசிகலா” என்று பிரசுரிக்கப்பட்டுள்ளது.

தஞ்சாவூரில் உள்ள பிரகதீஷ் ஹாஸ்பிட்டல் எனக்கு மட்டுமே சொந்த மானது அல்ல. பதினாறு பங்குதாரர்களில் நானும் ஒருவன். நான் அந்தக் கம்பெனியின் மேனேஜிங் டைரக்டராக இருக்கின்றேன். சொத்துக்களுக் காக ஆவணங்களைக் காட்டி தேசிய உடைமையாக்கப்பட்ட வங்கியில் இந்த பிரைவேட் லிமிடெட் கம்பெனி அடமானக் கடன் வாங்கி நிதி நிலை ஆதாரம் தேடப்பட்டுள்ளது. இதனைத் தீர விசாரிக்காமல் ஏதோ ஹாஸ்பிட்டல் எனது தனிப்பட்ட ஏகபோக சொத்து என்று கட்டுரையில் சொல்லியிருப்பது முறையல்ல. ஹாஸ்பிட்டலின் மதிப்பு ரூ. 37 லட்சம் என்று குறிப்பிட்டுள்ளதும் சரியல்ல.

திருத்துறைப்பூண்டி டவுனில் எனது சகோதரி சசிகலா திருமண மண்டபம் கட்டுகிறார் என்பது உண்மையல்ல. திருமண மண்டபத்தை எனது மனைவிதான் கட்டிக் கொண்டு இருக்கிறார். திருத்துறைப்பூண்டி டவுனில் எங்களது குடும்பம் பாரம்பரியம் மிக்கது. எனது பாட்டனார் அந்த டவுனின் முன்னோடியான பெரும் வணிகர். நான் சுமார் 24 ஆண்டுகளாய் மருத்துவத் தொழில் செய்பவன். என் மனைவியும் இந்த மாவட்டத்தின் பழமையான செல்வச் செழிப்பு மிக்க குடும்பத்தில் பிறந்தவர். திருத்துறைப்பூண்டி டவுனில் எனது மனைவி, எங்கள் குடும்பத்துக்குப் பூர்வீக சொந்தமான மனையில் திருமண மண்டபத்தைக் கட்டுகிறார். எனது சகோதரி சசிகலாவுக்கும் அந்தத் திருமண மண்டபத்துக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை. திருமண மண்டபம், ஜெயலலிதா ஆட்சிக்கு வருவதற்கு முன்பே, 1990 டிசம்பர் மாதத்தில் கட்டத் துவங்கப்பட்டதாகும். அதற்கான என் மனைவியின் சொந்த மனையின் மதிப்பு ரூ. 6 லட்சம். திருமண மண்டபத்தின் எஸ்டிமேட் ரூ. 40 லட்சம். தேசிய உடைமையாக்கப்பட்ட வங்கியில் எனது மனைவி ஒரு பகுதியைக் கடனாகப் பெற்றுக் கட்டுகிறார். அத் திருமண மண்டபம் ரூபாய் ஒரு கோடி செலவில் கட்டப்படுவதாகச் சொல்லியிருப்பது உண்மையல்ல.

டாக்டர் வி.விநோதகன்.

லக்ஷ்மண்குடி,
14.7.92

# டி.வி.யில் 'அலை ஓசை'

## -தரமான தயாரிப்பு

அது ஒரு வடஇந்திய ரயில்வே ஸ்டேஷன் வெயிட்டிங் அறை. பெட்டிகள், ஹோல்டால்கள் என்று ஆங்காங்கே இறைந்து கிடக்க, பிரயாணிகள் பலர், அரைத் தூக்கத்திலும், முழுத் தூக்கத்திலும் இருந்தார்கள். சிலர் நன்றாகக் காலை நீட்டிப் படுத்துத் தூங்க, இன்னும் பலர் உட்கார்ந்து கொண்டும், சாய்ந்து கொண்டும் கண்ணை மூடிக் கொண்டுமிருந்தார்கள். மிலிட்டரிகாரர்கள் நடமாட்டம் வேறு. சாயும் வசதியுள்ள ரயில்வே பெஞ்ச் ஒன்றில் கவலையுடன் ஒரு பெண் உட்கார்ந்திருக்கிறாள். அவள் எதிரே காலடியில் ஒரு பழைய டிரங்க் பெட்டி. திடீரென்று அவள் முன்பு இரண்டு பேர் தோன்ற, அப்பெண் மிரண்டு போகிறாள்...



● அலை ஓசை...

"கட்" என்று சொன்னபடி குறுக்கிடுகிறார் டைரக்டர் ஆர். ராமலிங்கம்.

"ஏம்மா உம் முகத்தில் ரீயாக்ஷன் இன்னும் சரியா வரணும்" என்கிறார் அவர்.

மேற்சொன்ன காட்சி, லட்சக்கணக்கான வாசகர்களைக் கவர்ந்த அமரர் "கல்கி"யின் 'அலை ஓசை' நாவலின் டெலி-ஸீரியலுக்காக, சென்னையில் வெஸ்லி பள்ளியில் உள்ள ஒரு பெரிய ஹாலில் எடுக்கப்பட்டது. பெட்டியுடன் உட்கார்ந்திருந்த பெண் - சீதா பாத்திரத்தில் நடிக்கும் துளசி.

"என்ன டைரக்டர் ஸார், ஆக்ரா ஸ்டேஷனைச் சென்னைக்கே கொண்டு வந்து விட்டீர்கள் போலிருக்கிறதே...?" என்றோம்.

"நீங்கள் சொல்வது சரிதான். அமரர் கல்கி அவர்கள் ராஜம்பேட்டை என்னும் தஞ்சை கிராமத்தில் கதையைத் துவங்கி, சென்னை, ஹைதராபாத், பாட்னா, ஆக்ரா, டில்லி, கராச்சி என்று கொண்டு செல்கிறார். எல்லா இடத்திலும் சென்று எடுக்க வேண்டுமென்று மனத்தில் ஆசையிருந்தாலும் நிதி



● ராமலிங்கம்



● ...சில

மற்றும் நேரப் பிரச்னைகளால் சாத்தியப்படவில்லை'' என்கிறார் ராமலிங்கம்.

இதுவரையில் டெலிவிஷனில் சீரியலைப் பார்த்தவர்கள் ராமலிங்கத்தைப் பாராட்டுகிறார்கள். அட்டகாசமான ஆரம்பம் என்று குறிப்பிட்டிருக்கிறது ஒரு பத்திரிகை.

''கத்தி மேல் நடப்பது போலத்தான் என் நிலைமை. பெரும்பாலோருக்கு இந்தக் கதை நன்கு தெரியும். அதனால் ஏகப்பட்ட எதிர்பார்ப்பு'' என்று சொல்லும் ராமலிங்கத்தின் மனத்திலும் ஐந்து வருடங்களாக அலை ஓசைதானாம்!

''டி.வி.யில் ஓ.கே. செய்த பின் படமெடுக்கலாம் என்று காத்திருந்து ஆரம்பித்ததில் பல பிரச்னைகள். முக்கியமாக ஃபைனான்ஸ். போதாக்குறைக்கு 'இதெல்லாம் எதுக்குப்பா? கஷ்டப்பட்டு எடுக்கற...' என்று அவநம்பிக்கை கலந்த அறிவுரைகள்! நான் சற்றும் தளரவில்லை. ஜெமினி கணேசன், ரகுவரன், ரேகா, சரண்யா என்று கொஞ்சம் பெரிய நட்சத்திரங்களைப் போட்டு, முதலில் கொஞ்சம் எடுத்தேன். ஆனால், பல காரணங்களினால் அதைத் தொடர முடியவில்லை. அதை அப்படியே ஊறப் போட்டு விட்டு, சில மாதங்கள் கழித்து, மேஜர் அரவிந்த், துளசி, சுதா, மனோஜ், ஏ.ஆர். எஸ்., கமலா காமேஷ் ஆகியோரைப் போட்டு எடுக்க ஆரம்பித்தேன். வீடியோ சாதனங்களை செவன்த் சேனல் நாராயணன் கொடுத்துதவினார். பலர் என் ஆற்றலைக் குறித்துச் சந்தேகப்பட்ட நேரத்தில் டி.வி. நிலைய டைரக்டர் நடராஜன் ஊக்கமும் உற்சாகமும் ஊட்டினார். இப்போது எந்தப் பிரச்னையுமில்லை'' என்று கூறி, சற்றே 'ரிலாக்ஸ்' செய்தார் ராமலிங்கம்.

● ...கள் சிலர்



**ரா**மலிங்கத்துக்குச் சொந்த ஊர் தஞ்சை மாவட்டம் நீடா மங்கலம் அருகே உள்ள கோவில் வெண்ணி என்ற கிராமம். நடிக்க வேண்டும் என்ற ஆசையில் சென்னைக்கு வந்து, பின்னர் எடிட்டிங் கற்று, அதற்குப் பிறகு உதவி டைரக்டராகப் பத்து வருடங்களுக்கு மேல் ஏ. சி. திருலோக்சந்தரிடம் பணியாற்றியவர். ''எனக்குக் கிடைக்கும் பாராட்டெல்லாம் அவருக்கே உரியது. தொழிலைக் கற்றுக் கொடுத்தவர் அவர்தான்'' என்று அடக்கத்துடன் கூறுகிறார்.

அலை ஓசை திரைக்கதையை அமைக்க ஆறு மாத காலம் பிடித்ததாம். கதை சுமார் ஐம்பது வருடங்களுக்கு முன் நடப்பதாக இருப்பதால் பல விஷயங்களில் ஜாக்கிரதையாக இருக்க வேண்டியிருக்கிறது. படத்தில் எங்கேயும் டியூப் லைட்கள் இடம் பெறாது பார்த்துக் கொள்ள வேண்டும்; தெருவில் போகும் கார்கள் பழைய காலத்தவையாக இருக்க வேண்டும். இதற்காக எட்டு வின்டேஜ் கார்களை வாடகைக்கு எடுத்துள்ளார்கள். பாத்திரங்கள் அணியும் உடைகள் அந்தக் காலத்தவையாக இருக்க வேண்டும்... குறிப்பாக போலீஸ்காரர்கள் பாத்திரத்திற்கு அந்தக் காலத்துத் தொப்பிகளைப் புதிதாகத் தயாரிக்க வேண்டியிருந்ததாம்.

தஞ்சை மாவட்டம் முழுக்கச் சுற்றி, கடைசியாக கணபதி அக்ரஹாரத்தை ராஜம் - பேட்டையாகப் படமாக்கி இருக்கிறார்கள். சென்னையில் பல பழைய பங்களாக்களைத் தேடிப் பிடித்து நிலைக் களனாகப் பயன்படுத்தி யிருக்கிறார்கள்.

மற்ற டெலி-ஸீரியல்களில், மிஞ்சிப் போனால் ஆறேழு நடிகர், நடிகைகளுக்கு மேல் தேவைப்படாது. ஆனால் அலை ஓசை ஷூட்டிங்கில் எந்தச் சமயத்திலும் பிரதான பாத்திரங்களைத் தாங்கி நடிப்பவர்களைத் தவிர 15 துணை நடிக, நடிகையர் தேவைப்படுகிறார்களாம்.

''அவ்வளவு பெரிய கதை யில், சில காட்சிகளை நான் எடுக்க முடியாததால் விட்டு விட்டேனே தவிர கதையைச் சிறிதளவு கூட மாற்றவில்லை. சில விஷயங்களை வெறும் வசனங்களிலேயே, பின்னணியில் சொல்லி விடுகிறேன். கதையில் வரும் மதக்கலவரங்களை வன்முறையைக் காண்பிக்க முடியாது. இப்படிப் பல 'முடியாதுகள்' இருந்தபோதிலும் என்னால் முடிந்த வரை படம் எடுத்துள்ளேன். இனி மக்கள்தான் சொல்ல வேண்டும்'' என்றார் ராமலிங்கம்.

''அமரர் 'கல்கி'யின் நாவல்களில் முழுக்க மெலிதாக நகைச்சுவை நடை போடும். உங்கள் ஸீரியலைப் பார்த்தபின் பலர் நகைச்சுவை இல்லை என்று கூறுகிறார்களே!''

''அவர்கள் சொல்வது ஓரளவு உண்மையாக இருக்கலாம். படிக்கும் போது நான் பலமுறை வாய் விட்டுச் சிரித்திருக்கிறேன். குறிப்பாகப் பாத்திரங்களை அறிமுகப்படுத்தும் போது அவர் எழுதும் வர்ணனைகள் நம்மையறியாமல் புன்னகை செய்ய வைக்கும். அதையெல்லாம் அப்படியே படமாகப் பிடித்து விட முடியாது. இதைப் போன்ற இடங்களில் எழுத்தின் ஆற்றல் விஞ்சி நிற்கிறது. போஸ்ட் ஆபீஸ் காட்சிகளிலும் திண்ணைப் பேச்சிலும் ஓரளவு கலகலப்பை உண்டு பண்ண முயன்றிருக்கிறேன். மற்றபடி ஸீரியஸ் கதையில் நகைச்சுவையை வலியத் திணிப்பதும் எனக்கு உடன்பாடில்லை.''

''இதுவரை எடுத்த காட்சிகளில் மிகச் சிரமப்பட்டு எடுத்தது, எது?''

''ரொம்ப சங்கடமான கேள்வி. ஒவ்வொரு காட்சியும் சிரமப்பட்டுத்தான் எடுக்கப்படுகிறது. நான் ரசித்த, காட்சி என்றால், ராகவன் பெண் பார்க்கும் காட்சியைச் சொல்லலாம். இந்தக் காட்சியை எப்படி அமைக்கப் போகிறோமோ என்று பயம் இருந்தது. எடுத்த பின் பார்த்த போது, யூனிட்டே பாராட்டியது.''

பேட்டி முடிந்த பின்னர் அக் காட்சியைத் தொலைக்காட்சியில் பார்க்க நேர்ந்த போது நமக்கும் பாராட்டவே தோன்றியது. குறிப்பாக லலிதாவாக நடித்த பிருந்தா, அக் காட்சியில் வெளிப்படுத்திய உணர்ச்சியும் பாவமும், நின்றபடியே சீதாவும், லலிதாவும் 'நருமோமு' என்று கருதி சேராமல் பாடியதும் கதையின் வரிகளைக் கண் முன்னே நிறுத்தின...

அலை ஓசை ஸீரியல் டீ.வி.யில் வந்த பிறகு, கதை தெரியாத பலர் புத்தகத்தைத் தேடுகிறார்கள். ''நான் அந்தக் காலத்திலேயே தொடராக வரும் போது படித்து விட்டவன். டைரக்டர் மிகவும் சிரத்தையோடு ஒவ்வொரு காட்சியையும் எடுக்கிறார்'' என்று சொல்கிறார் துரைசாமி வேடத்தில் நடிக்கும் ஏ. ஆர். எஸ்.

கதையை ஏற்கெனவே படித்தவர்களோ, ''எங்கள் மனத்திரையில் நாங்கள் கற்பனை செய்து வைத்த பாத்திரங்களையும் நிலைக் களன்களையும் எப்படிக் காண்பிக்கப் போகிறார்களோ? என்று சந்தேகத்துடன்தான் பார்த்தோம். ஆனால் பார்த்த பிறகு சந்தோஷமே ஏற்பட்டது. அமரர் கல்கி எழுதிய உரையாடல்களைப் பல இடங்களில் மாற்றாமல் கையாண்டிருக்கிறார்கள். இதனால் காட்சிகளுடன் கலபமாக ஒன்ற முடிகிறது'' என்கின்றனர்.

ராமலிங்கத்துடைய வெற்றிக்கு இரண்டாவது காரணம் மேற்குறிப்பிட்டது எனில், முதல் காரணம் அவரது உழைப்பு!

**- ப்ரியன்**

அட்டை வண்ணப்படம்,

படங்கள் : **ராஜன்**



## தூத்துக்குடி வாசகர்களே...

ஆகஸ்ட் 8-ஆம் தேதி சனிக்கிழமையன்று காலை பத்து மணியிலிருந்து மாலை மூன்றரை மணிவரை, தூத்துக்குடியிலுள்ள விசாகா ஹோட்டலில் கல்கி ஆசிரியரையும் ஆசிரியர் குழுவினரையும் நேரில் சந்தித்துப் பேசலாம்; நகரின் குறை நிறைகளையும் கூறலாம்.

**- ஆசிரியர்**




து வீச்சு கன இறுக்கமாகப் போடணும்னால்
மற்ற எதுவும் தளராமல் இருக்கணும்!
VIP
CHAMP
ஹெர்ரிங்-போன்
எலாஸ்டிக்குடன்
இடுப்பில் நிலையாக
அமர்ந்திடும் ஜட்டி.



# கல்கி



1992
ஆகஸ்டு 9
மலர் : 51
இதழ் : 2
ஆங்கீரச
ஆடி 25

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா. - பாரதியார்.

## நேற்று சிதம்பரம், இன்று பவார், நாளை...?

நீதிமன்றங்கள், நாடாளுமன்றம், அதிகார வர்க்கம் ஆகியன ஜனநாயகத்தின் மூன்று முக்கிய தூண்கள். இவை ஒவ்வொன்றும் தனித்தனியே தங்கள் கடமைகளைச் செவ்வனே, பொறுப்புணர்வுடன் செய்தால்தான் ஜனநாயகம் சிறக்கும்.

இன்னொரு அம்சமும் உண்டு. அதுதான் சட்டத்தின் ஆட்சி, தர்மத்தின் ஆட்சி என்ற பிரிவுகள். சட்டத்தை நிர்ணயிக்கச் சட்டப் புத்தகங்கள் உள்ளன. ஆனால் தர்மம் என்பது எழுதப்படாத சட்டம். அதற்கு மனச்சாட்சிதான் காவலன்.

சட்டம் இயற்ற நாடாளுமன்றத்துக்குப் பூரண உரிமை உண்டு. அங்கு மிருக பல மெஜாரிட்டி ஆளும் கட்சிக்கு இருந்தால் அநீதியான சட்டங்களைக் கூட இயற்ற முடியும். அப்படி இயற்றாமல் தடுப்பது தார்மீக உணர்வே. நீதிமன்றம், நாடாளுமன்றம், அதிகாரவர்க்கம் ஆகிய முப்பிரிவுகளும் சட்டத்தையும் கவனிக்க வேண்டும் தர்மத்தையும் பார்க்க வேண்டும்.

இன்று நீதித் துறையிலே இருப்பவர்கள் கூடச் சில அநீதியான காரியங்களைச் செய்ததாக வெளிச்சத்துக்கு வருகிறது. நீதிபதிகளுக்குச் சட்டம் தெரியாதா என்ன? தர்மத்தையும் சேர்த்தே கவனிக்கத் தவறியதால்தான் புகார்கள் எழுகின்றன.

சிதம்பரம் ராஜினாமாவை எடுத்துக் கொள்ளுங்கள். தாம் செய்ததில் தவறு ஏதுமில்லை என்று அவர் வாதாடுகிறார். சட்டப்படி வாதம் சரிதான். ஆனால் தார்மீக நெறிப்படி அந்த வாதம் செல்லாது. வணிகத்துறை அமைச்சர்; கொள்கைகளை வகுத்துச் செயல்படும் நிலையில் உள்ளவர்; ஒரு நிறுவனத்தை ஆக்கவோ அழிக்கவோ கூடிய சக்தி படைத்தவர்; அவர், குறிப்பிட்ட ஒரு நிறுவனத்தில் ஏராளப் பங்குகளை வாங்கிப் பணம் பண்ண முயற்சி செய்வது தர்மமே அல்ல. ராஜினாமாவைப் பிரதமர் ஏற்றதற்கும் இதுவே காரணம்.

இப்போது ரயில்வே அமைச்சர் ஜாஃபர் ஷெரீஃப் மீதும் ஒரு புகார் கிளம்பியுள்ளது. ஹிட்டாச்சி நிறுவனத்துக்குத் தரப்பட்டிருந்த ஒரு காண்ட்ராக்டை மாற்றி A B B நிறுவனத்துக்குத் தந்து விட்டார் என்பது குற்றச்சாட்டு. அவர், தமது அதிகார வரம்புக்கு உட்பட்டே காரியம் செய்திருக்கலாம். ஆனால் ABB நிறுவனத்தின் முக்கியஸ்தர் ஒருவர் இவரது சம்பந்தியாவதுதான் பிரச்னையைப் பூதாகார வடிவமெடுக்கச் செய்து விட்டது. தமக்கு வேண்டியவருக்குச் சலுகை காட்டியதாகக் கூறப்படும் குற்றச்சாட்டிலிருந்து தப்ப முடியாது போகிறது. சட்டப் பிரச்னையில் சிக்காவிடினும் ஷெரீஃப், தார்மீகப் பிரச்னையில் மாட்டிக் கொள்கிறார்.

ஷரத் பவார் மீதும் ஒரு குற்றச்சாட்டு. அதிகாரிகள் சிலர் அரசு நிலத்தை மனைகளாகத் தங்களுக்குள் பங்கு பிரித்துக் கொண்ட போது பவார் அதில் குறுக்கிட்டுத் தடுத்திருக்கலாம். பேசாமல் இருந்து விட்டார். ''பேச வேண்டிய நேரத்தில் பேசாமல் இருந்ததும் குற்றம்'' என்கிறது நீதிமன்றம். அநீதிக்குப் பவார் துணை போகாவிட்டாலும் அதைத் தடுக்கக்கூடிய வாய்ப்பிருந்த போது தடுக்கத் தவறியது சட்டபூர்வமாகத் தண்டனைக்கு உரியதாக இல்லாமல் போகலாம்; ஆனால் தார்மீகக் குற்றமே.

அரியலூர் ரயில் விபத்துக்கும் லால்பகதூர் சாஸ்திரிக்கும் என்ன சம்பந்தம்? ஒன்றுமில்லை. ஆனால் ரயில்வே அமைச்சர் என்ற அளவில் தார்மீகப் பொறுப்பேற்று ராஜினாமா செய்தார் சாஸ்திரி. இத்தகைய உயர்ந்த மரபுகள் இன்று மங்கி மறைந்து வருகின்றன. ராஜினாமா ஏற்கப்பட்ட பிறகும் தாம் ஒரு தவறும் செய்யவில்லை என்று வாதாடுவதைத்தான் பார்க்கிறோம்.

நாட்டில் உள்ள எல்லாத் துறையினரிடமும் சட்டத்துக்கு உட்பட்டுக் கடமையாற்றுவதுடன் தர்மத்தை அனுசரித்தும் நடக்க வேண்டும் என்ற பண்பு வளர வேண்டும். இந்தப் பண்பாட்டைப் பிரதமர், குடியரசுத் தலைவர் போன்றோர் அடிக்கடி வலியுறுத்திப் பேச வேண்டும். அப்போதுதான் ஜனநாயகம் பலப்படும். இல்லையெனில் குட்டித் தேவதைகள் செய்வதையும் செய்து விட்டு, ''ஆமாம், அதிலென்ன தப்பு?'' என்றுதான் கேட்டுக் கொண்டிருப்பார்கள்!



பாக்கிப் பேர் எல்லாரும் இருக்கட்டும் போகட்டும்... அ'வைப் பிடிச்சுக்கிட்டு நிக்கிற அந்த அம்மாவை மட்டும் நீக்கிட்டா போதும்! பார்க்கச் சகிக்கலே...
அ
தி
மு
க




இத்யாதி
இத்யாதி
கட்சிப் பிரச்னைகள்
அதிகாரிகள் தில்லுமுல்லு
அர்ஜுன் சிங் கைவைத்த வேட்டை
சரத்பவார் ராஜினாமா கோரிக்கை
ஜாபர்ஷெரீப் ராஜினாமா கோரிக்கை
கிருஷ்ணமூர்த்தி ராஜினாமா
சிதம்பரம் ராஜினாமா




தலை சுத்துதே...! நான் இதைக் கவனிப்பேனா... அதைக் கவனிப்பேனா...?
நாட்டின் பிரச்னைகள்




ஜனாதிபதி தேர்தல் முடிஞ்சது... துணை ஜனாதிபதி தேர்தல் வருது...




காங்கிரசுக்கு மறுபடியும் ஆதரவு குடுக்கிறதுக்கு ஒரு சான்ஸ்!




தாழ்த்தப் பட்டவர்னு சொல்லி ஆதரவு தர ஒரு சான்ஸ்!
நேர்மையானதா ஒருத்தரைத் தேர்ந்தெடுக்க ஒரு சான்ஸ்!




ஐயையா! தப்புத் தப்பா ஓட்டுப் போட்டோம்கிற குற்றச் சாட்டு வராமலிருக்க ஒரு சான்ஸ்!

# தாக்குப் பிடிப்பாரா பங்காரப்பா ?



● பங்காரப்பா

பங்காரப்பா பதவிக்கு வந்த நாள் முதற்கொண்டே அவருக்கு எதிரான கோஷ்டிகள் அவரை இறக்குவதற்குப் பிரம்மப் பிரயத்தனங்கள் செய்து கொண்டுதான் இருக்கின்றன. கர்நாடகத்தைச் சேர்ந்த காங்கிரஸ் எம்.பிக்களில் தொண்ணூறு சதம் பங்காரப்பாவை எதிர்க்கிறவர்களே. எம்.எல்.ஏக்களிலும் கணிசமான பேர் பங்காரப்பாவை எதிர்க்கிறார்கள். பொது மக்களைப் பொறுத்த வரை என்றைக்குமே பங்காரப்பாவின் மீது பிரமாத அன்பு இருந்ததில்லை. அவரது அரசியல் அப்படி. பி. எஸ். பி. கட்சி எம். எல்.ஏவாகத் தமது அரசியலைத் துவக்கியவர் அவர். பின்னர் அதிலிருந்து விலகி காங்கிரஸில் சேர்ந்தார். பின்னர் விலகினார். கிராந்தி ரங்கா என்று கட்சி ஆரம்பித்தார். ஜனதா கட்சி ஆரம்பித்த போது ஜனதாவில் சேர்ந்தார். முதலமைச்சர் பதவி கிடைக்கவில்லையென்றதும் அங்கிருந்து விலகினார். சிறிது காலத்துக்குச் சொந்தக் கட்சியின் பெயர் சொல்லிக் கொண்டிருந்தார். பின்னர் திரும்பவும் காங்கிரஸ். ஆனால் ஷிமோகாவில் உள்ள தமது தொகுதியான ஷொரபாவில் இருந்து தொடர்ந்து எம். எல். ஏவாகத் தேர்ந்தெடுக்கப் படுவதால் அரசியலில் எத்தனைப் பல்டிகள் அடித்தபோதும் தொடர்ந்து முன்னணியில் இருக்க முடிந்தது.

● கிருஷ்ணப்பா



தேவராஜ் அர்ஸ் மந்திரி சபையிலிருந்தும் குண்டுராவ் மந்திரி சபையிலிருந்தும் கருத்து வேறுபாடுகள் காரணமாக இரண்டு முறை விலகிய பங்காரப்பா, ஹெக்டே மந்திரி சபையில் சேரவே மாட்டேனென்று அடம்பிடித்தார். காங்கிரஸ் கட்சி மறுபடியும் ஆட்சியைப் பிடித்த போது முதல்வர் பதவிக்குப் பெரிதும் முயன்றவர் இவர் தான். ஆனால் போதுமான எம்.எல். ஏக்களைத் திரட்ட முடியாததால் வாய்ப்பு வீரேந்திர பாட்டீலுக்குப் போனது. வீரேந்திர பாட்டீலுக்கும் ராஜீவ் காந்திக்கும் ஏற்பட்ட கருத்து வேறுபாடுகளும், எதிர்பாராதவிதமாய் பாட்டீலுக்கு ஏற்பட்ட உடல்கோளாறும் புதிய முதல்வரைத் தேர்ந்தெடுக்க வகை செய்தன. முதல்வர் பதவிக்கு வீரப்ப மொய்லி, கே. எச். பாட்டீல், எஸ். எம். கிருஷ்ணா, குண்டு ராவ், பங்காரப்பா ஆகியோர் போட்டியிட்டனர். இவர்களில் கே. எச். பாட்டீலுக்கும் மொய்லிக்கும் எம்.எல்.ஏக்களின் கணிசமான ஆதரவு இருந்தது. ஆனால் ராஜீவ் காந்தியின் 'அருள் பார்வை' பங்காரப்பாவின் மீது விழ... பங்காரப்பா முதல் மந்திரி ஆனார். அப்போது கூட, 'இது தற்காலிக முடிவுதான். சிறிது நாட்கள் ஆகட்டும்; இந்தியா முழுமைக்குமான பொதுத்

தேர்தல்கள் முடிந்த பிறகு நிச்சயம் மந்திரி சபையில் மாறுதல் இருக்கும். நீங்கள் முதல்வராக வரலாம்' என்று மொய்லியிடம் ராஜீவ் சொல்லியிருந்தாரென்றும் ஒரு பேச்சு அடிபடுகிறது.

ராஜீவின் மரணத்துக்குப் பிறகு நரசிம்ம ராவ் பதவிக்கு வந்ததுமே 'பங்காரப்பாவை மாற்ற வேண்டும்' - என்ற கோஷம் எம்.எல்.ஏக்கள் மத்தியில் ஆரம்பமாயிற்று. கே. எச். பாட்டீல் ஒரு கோஷ்டி. வீரப்ப மொய்லி ஒரு கோஷ்டி, எஸ். எம். கிருஷ்ணா ஒரு கோஷ்டி, குண்டுராவ் ஒரு கோஷ்டியென்று வாரம் தவறாமல் டெல்லிக்குப் படையெடுத்தார்கள். பிரச்னை பெரிதாக இருந்தபோதிலும் தீர்வு சொல்வது நரசிம்மராவுக்குச் சுலபமாகப் போய் விட்டது. ''ஆளுக்கு முப்பது பேர் முப்பத்தைந்து பேர் சேர்ந்து கொண்டு ஒரு தலைவரைச் சொல்லிக் கொண்டு வராதீர்கள். எல்லாரும் ஒட்டுமொத்தமாய் ஒரே தலைவரைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு என்னிடம் வாருங்கள். நிச்சயம் அவரை நியமிக்கிறேன்.''

இந்த பதிலில் எதிர்ப்புக் கோஷ்டியினர் துவண்டு போய் விட்டனர் என்றுதான் சொல்ல வேண்டும். அவர்களால் ஒரே தலைவரைத் தேர்ந்தெடுக்க முடியவில்லை. இருந்தாலும் கே. எச். பாட்டீல் மட்டும் தமது முயற்சியில் மனம் தளராமல் இருந்தார். வீரேந்திர பாட்டீலின் ஆதரவுடன் மற்ற எம்.எல்.ஏக்களையும் தமது பக்கம் சேர்த்துக் கொண்டு நரசிம்ம ராவ் சொன்னது போல் 'ஒருமனதான தலைவராய்' வந்து விடுவார்; பங்காரப்பா இறங்குவது நிச்சயம் என்ற நிலைமை கிட்டத்தட்ட வந்து விடும் போல் இருந்தது. இந்தக் காட்சியில் ஒரு திடீர் மாறுதல்... எதிர்பாராதவிதமாய் கே. எச். பாட்டீல் மஞ்சள் காமாலையால் பிடிக்கப்பட்டு படுக்கையில் விழுந்தார். மரணமடைந்தார். பங்காரப்பாவின் பதவி தப்பித்தது!

**கே.** எச். பாட்டீலின் திடீர் மறைவில் எதிர்ப்புக் கோஷ்டி கலங்கிப் போனது. சுதாரித்து எழுந்து மறுபடி டெல்லியின் கதவைத் தட்டிய போது, 'ஜனாதிபதி தேர்தல் முடிகிறவரைக்கும் எல்லாரும் பேசாமலிருங்கள் எந்த மாற்றமும் செய்ய முடியாது'' - என்று சொல்லி விட்டது டெல்லித் தலைமை. இருந்தும் யாரும் சும்மா இருக்கவில்லை. ஆளாளுக்கு அவரவர் வழியில் முயற்சிகளைச் செய்தபடிதான் இருந்தனர். ஒருநாள் திடீரென்று நிருபர்களை அழைத்தார் குண்டுராவ், ''டெல்லியிலிருந்து அழைப்பு வந்திருக்கிறது. டெல்லி போகிறேன். இன்னமும் இரண்டு நாட்களில் இங்கே மந்திரிசபை மாறப் போகிறது. போய் வந்தபின் மற்ற விஷயங்கள் சொல்கிறேன்'' - என்று தடபுடலாகச் சொல்லி விட்டு டெல்லி போனார். ஒன்றும் நடக்கவில்லை.

காவேரி பிரச்னை, சுப்ரீம் கோர்ட் தீர்ப்புக்கு எதிரான தீர்மானம், சட்டம் ஒழுங்கு சீர்குலைவு, உட்கட்சிச் சண்டை விலைவாசி ஏற்றங்கள், பால் விலை உயர்வு, மின்கட்டணம் உயர்வு, குடிதண்ணீர் வரி உயர்வு எனப் பல்வேறு பிரச்னைகளுக்கு மத்தியிலும் நரசிம்மராவின் ஆதரவு இருந்ததனால் வெற்றிகரமாகக் காலம் தள்ளிக் கொண்டே வந்தார் பங்காரப்பா.



* மொய்லி



* குண்டுராவ்

இடைத் தேர்தல் முடிவுகள் வந்தன. ''காங்கிரஸுக்கான ஆதரவு குறைந்து விட்டது. இதற்கான தார்மீகப் பொறுப்பேற்று பங்காரப்பா ராஜினாமா செய்ய வேண்டும்'' - என்று எதிர்க் கோஷ்டிகள் மறுபடியும் கிளம்பின.

**ப**ங்காரப்பா எதையும் கண்டு கொள்ளவில்லை. அஷ்ரயா திட்டம், விஸ்வா வேலை வாய்ப்புத் திட்டம், ஏழைகளுக்கு இலவச வேட்டி, வீட்டுமனை, குறைந்த விலைக் கடைகள் என்பதாகச் சில கவர்ச்சித் திட்டங்களை அறிவித்தார். கூடவே மின்கட்டண உயர்வு, பால் விலை

உயர்வு என்றும் அறிவித்தார். தள்ளிப் போட்டுக் கொண்டிருந்த வெளிநாட்டுப் பயணத்தைச் சந்தோஷமாகத் துவக்கி விட்டார்.

இவ்வளவு நாட்களும் அலிகமாய் அலட்டிக் கொள்ளாமல் 'ஓடு மீன் ஓட' காத்துக் கொண்டிருந்த வீரப்ப மொய்லி, உறுமீன் வந்தது என்று நினைத்தாரோ என்னவோ, செயல்பட ஆரம்பித்து விட்டார். பங்காரப்பா பதவி விலக வேண்டும் என்று பகிரங்கமாக அறிவித்தார். பத்திரிகைகளுக்கு அவர் கொடுத்த அறிக்கைகள் பரபரப்பு பெற்றன : "மாநில அரசாங்கத்திற்கு உடனடியாக மேஜர் ஆபரேஷன் தேவைப்படுகிறது. செய்யா விட்டால் நிலைமை விபரீதமாகி விடும். நான் பிரதமரிடம் தீர்மானமாகச் சொல்லி விட்டேன். இனிமேலும் நான் சும்மா இருக்கப் போவதில்லை. தலைமையை மாற்றாவிட்டால் நான் என்னுடைய வழி யில் போக வேண்டியதுதான்."

**வீ**ரப்ப மொய்லி ஆரம்பித்து வைத்ததும் பங்காரப்பா எதிர்ப்புக் கோஷ்டிகள் மீண்டும் உயிர் பெற்று விட்டன. முன்னாள் மந்திரிகள் தங்களது ஆதரவாளர்களுடன் நிருபர்களைச் சந்தித்தனர். பங்காரப்பா மீது அடுக்கடுக்கான குற்றச்சாட்டுக்களையும் ஊழல் புகார்ப் பட்டியலையும் வெளி யிட்டனர்.

சும்மா இருப்பாரா குண்டுராவ்? அவரும் களத்தில் குதித்தார். "மேஜர் ஆபரேஷன் தேவை என்று மொய்லி சொல்லி இருப்பது உண்மைதான். பரிதாபம் என்ன வென்றால் ஆபரேஷன் பங்காரப்பாவுக்கு மட்டுமல்ல. மொய்லிக்கும் தேவை. பங்கா ரப்பா முதல் நோயாளி என்றால் இவர் நோயாளி நம்பர் டூ. இவர் மட்டுமின்றி மொத்த மந்திரி சபையே நோயாளிக் கூட்டம்தான். மிகப் பெரிய சர்ஜன்தான் உடனடியாக ஆபரேஷனை மேற்கொள்ள வேண்டும். இல்லையென்றால் அத்தனைப் பேருமே செத்துப் போவார் கள்" - என்றார் குண்டுராவ்.

"அந்த மிகப் பெரிய சர்ஜன் நீங்களாக இருக்க விரும்புகிறீர்களா?" - என்ற கேள்விக்கு,

"மேலிடம் விரும்பினால் நான் பொறுப்பேற்கத் தயார். எப்போதுமே நான் பொறுப்புக்களிலிருந்து நழுவிக் கொண்டு ஓடுபவன் அல்ல" - என்றார்.

"**வீ**ரப்ப மொய்லி எடுக்கும் எந்த முயற்சியும் பலனளிக்கப் போவதில்லை. இவர் இப்போதுதானா பங்காரப்பாவுக்கு எதிரான செயல்களில் இறங்குகிறார்? அன்றையிலிருந்தே இதைத்தானே செய்து வருகிறார்?" - என்கிறார் பங்காரப்பாவின் ஆதரவாளரும் அமைச்சருமான டி. எம். மஞ்சுநாத்.

மொய்லி, குண்டுராவ் இவர்களைத் தவிர முதலமைச்சர் பதவி மீது குறிவைத்துச் செயல்படும் வேறு இருவர், சபாநாயகர் எஸ். எம். கிருஷ்ணாவும், முன்னாள் நிதி யமைச்சர் ராஜுசேகரமூர்த்தியும் (இவர் நிஜ லிங்கப்பாவின் மருமகன்)

மொய்லியின் ஆதரவு எம்.எல்.ஏக்களில் ஒருவரான கிருஷ்ணப்பாவைச் சந்தித்தோம். தற்சமயம் இவர் மொய்லியின் ஆதர வாளர் என்றாலும் இவர் எந்த குரூப்பும் கிடையாது. நடுநிலையாளர்தான். வர்தூர் தொகுதியில் நிறைய வேலைகள் செய்திருப்பதால் ஏகப்பட்ட செல்வாக்கு. "நீங்கள் மொய்லியின் ஆதரவாளரா?"

"நான் காங்கிரஸின் ஆதரவாளன். எனக்குத் தலைவர்கள் முக்கியமல்ல. கட்சியும் கட்சியின் மூலம் மக்களுக்குச் சேவை செய்வதும்தான் முக்கியம்."

"தற்போதைய நிலவரம் பற்றி என்ன சொல்ல விரும்புகிறீர்கள்?"

"பங்காரப்பா முதலமைச்சரானதும் நிறைய நல்லது செய்வார் என்றுதான் எதிர்பார்த்தோம். நிலைமை தலைகீழாகி விட்டது. அரசியலும் சரியில்லை. அரசாங்கமும் சரியில்லை. எனவே நிலைமையை மாற்றுவதற்குத் தலைமை மாற வேண்டும் என்கிறோம்."

"தற்சமயம் வீரப்ப மொய்லிக்கு ஆதரவாக எத்தனை எம்.எல்.ஏக்கள் இருக்கி றார்கள்?"

"அறுபத்தைந்து பேர் இருக்கிறார்கள் என்று நினைக்கிறேன். இது இன்னமும் அதிகரிக்கலாம்."

"முதலமைச்சரை மாற்றவில்லை யென்றால் 'நான் என்னுடைய போக்கின்படி போக வேண்டியிருக்கும்' என்கிறாரே மொய்லி... இதற்கு என்ன அர்த்தம்?




தனிக்கட்சி தொடங்குவாரா... அல்லது காங்கிரஸிலிருந்து விலகுவாரா?''

''ஒன்று மட்டும் சொல்கிறேன். காங்கிரஸுக்கு எந்தவிதத்திலும் துரோகம் செய்யக்கூடியவர் அல்ல மொய்லி. மற்றவர்களை விடவும் எவ்வளவோ மேம்பட்டவர். என்னைப் போன்ற பல எம்.எல்.ஏக்கள் எந்தக் கோஷ்டியையும் சேர்ந்தவர்கள் அல்ல. ஆனால் இன்றைக்கு மொய்லியை ஆதரிக்கிறோம். காரணம் காங்கிரஸ் இயக்கம். இந்த இயக்கம் காப்பாற்றப்பட வேண்டும். அரசாங்கம் நிலைக்க வேண்டும்.''

''வீரப்ப மொய்லி, எஸ். எம். கிருஷ்ணா, ராஜசேகரமூர்த்தி, குண்டுராவ் என்று பலரும் முதலமைச்சர் பதவிக்குப் போட்டியிடுகிறார்கள். இவர்களில் வெற்றி பெறப் போவது யார்?''

''யார் வெற்றி பெறுகிறார்கள் என்பதல்ல முக்கியம். யார் சேவை செய்வதில் முன்வணியில் இருக்கப் போகிறார்கள் என்பதுதான் முக்கியம்.''

''சரி... அதுதான் யார்?''

''மேலிடம்தான் தீர்மானிக்க வேண்டும்.''

''குண்டுராவ் தமது முயற்சியில் வெற்றி பெறுவாரா?''

''பத்திரிகைகள் அவருக்கு மிக அதிக விளம்பரம் தருகின்றன. உண்மையில் எம்.எல்.ஏக்கள் மத்தியில் செல்வாக்கெல்லாம் கிடையாது. அவர் விஷயத்தை விட்டு விடலாமென்று நினைக்கிறேன்.''

''எந்த ஒரு மாறுதல் என்றாலும் எப்போது நடக்கும்?''

''அநேகமாய் உதவி ஜனாதிபதித் தேர்தல் முடிந்ததும் நடக்கலாம்.''

மறைந்த கே. எச். பாட்டீலின் ஆதரவாளர்களில் பலரும் மொய்லியை ஆதரிப்பதால் தற்சமயம் மொய்லியின் பின்னால்தான் அதிகமான எம்.எல்.ஏக்கள் இருக்கிறார்கள்.

அமைச்சர் மஞ்சுநாத் போன்ற சிலர் பங்காரப்பாவுக்கு ஆபத்தில்லை என்று சொல்லிக் கொண்டிருந்தாலும் வெளிநாட்டுச் சுற்றுப் பயணத்தைப் பாதியில் முடித்துக் கொண்டு திரும்பி விடுவார் என்றுதான் செய்திகள் சொல்கின்றன. இந்த முறையும் பங்காரப்பாவை நரசிம்மராவ் காப்பாற்றுவாரா என்பதை விட பங்காரப்பாவை எதிர்ப்பவர்களிடம் ஓர் ஒற்றுமை இருக்கிறதா என்பதுதான் முக்கியமான கேள்வி.

- அமுதவன்



# ஒலிம்பிக்ஸ்:
## மனித முயற்சிக்கு முதலிடம்!



● பார்ஸிலோனாவில் நடக்கும் ஒலிம்பிக்ஸ் பந்தயங்களில் 173 நாடுகள் பங்கேற்கின்றன. இரண்டு வருடங்களுக்கு முன், உலகிலுள்ள மொத்த நாடுகளின் எண்ணிக்கையே 173ஐ விடக் குறைவாக இருந்தது!

● ஸ்பெயின் நாடு ஒலிம்பிக்ஸ் பந்தயத்தில் பங்கேற்க வரும் வீரர்களுக்கெல்லாம் இலவச உணவும் இருப்பிடமும் வழங்குகிறது. ஒலிம்பிக்ஸ் சரித்திரத்திலேயே முழுக்க முழுக்க இலவசமாக இந்த வசதிகள் செய்து தரப்படுவது இதுதான் முதல் முறை.

● அமெரிக்காவிலிருந்து மட்டுமே 850க்கும் மேற்பட்ட நபர்கள் (பயிற்சியாளர்கள் உள்பட) அடங்கிய குழு பார்ஸிலோனா சென்றுள்ளது.

● 'பத்தாயிரம் விளையாட்டு வீரர்கள் ஐயாயிரம் அதிகாரிகள்' எனக் கணக்கிட்டுத் தயார் நிலையில் இருந்த பார்ஸிலோனா அமைப்பாளர்கள் அந்த முன்னேற்பாடுகள் போதாமல் திணறிக் கொண்டிருக்கிறார்கள்.

● 1896 ஆம் ஆண்டு நவீன ஒலிம்பிக் போட்டிகள் ஆரம்பிக்கப்பட்ட போது ஒன்பது நாடுகளே பங்கேற்றன.

● ஒலிம்பிக் வீரர்களின் திறனும் காலப்போக்கில் அதிகரித்துள்ளது. 1896 இல் 1500 மீட்டர் ஓட்டப் பந்தயத்தை வென்ற ஆஸ்திரேலியர் எட்வின் ஃப்ளாக் 4 நிமிடம் 33.2 வினாடியில் அதனைச் சாதித்தார். அதே பந்தயத்தை 1988 (சியோலில்) வென்ற கென்ய வீரர் பீட்டர் ரோனோ எடுத்துக் கொண்ட நேரம் 3 நிமிடம் 35.9 வினாடிகள்தான்!

● கடந்த சில வருடங்களாக அமெரிக்கா, சோவியத் யூனியன், கிழக்கு ஜெர்மனி ஆகிய மூன்று நாடுகளிடையேதான் ஒலிம்பிக்ஸ் பந்தயங்களில் கடுமையான போட்டி நிலவி வந்தது. ஆனால் இவ்வாண்டு ஒலிம்பிக்ஸில் சோவியத் யூனியனுக்குப் பதிலாக, சுதந்திர ரஷ்ய மாநிலங்களின் ஒருங்கிணைந்த குழு (confederation of Independent States) பங்கேற்கும். கிழக்கும் - மேற்கும் ஒருங்கிணைந்த முதலாளித்துவ ஜெர்மனி





பங்கேற்கும். இவ்விரு நாடுகளிலும் நிகழ்ந்துள்ள அரசியல் மாற்றங்கள் விளையாட்டுத் துறையைப் பெரிய அளவில் பாதித்துள்ளது. அரசாங்கத்தால் சிறு வயதிலேயே அடையாளம் காணப்பட்டு, பயிற்றுவிக்கப்பட்டு, போஷிக்கப்பட்ட கிழக்கு ஜெர்மானிய விளையாட்டு வீரர்கள், அத்தகைய ஆதரவு தொடர்ந்து கிடைக்காததால் வேறு தொழில்கள் செய்து பிழைத்து வருகிறார்கள். ரஷ்யாவில் ஒருசில மகத்தான வீரர்கள் இன்னமும் இருந்தாலும் சிதறிப் போன மாநிலங்கள் ஒரு குழுவாக ஒருங்கிணைந்து போட்டியிடுவதால் பழைய உற்சாகம் இருக்காது என்பது கணிப்பு. இந்த மாநிலங்களுக்கிடையே சதா போராட்டம் இருக்கும் போது விளையாட்டுக் குழுவாக மட்டும் இவர்கள் எவ்வாறு ஒத்துழைக்க முடியும்?

சோவியத் யூனியன் அரசின் அதிகார பலம் மிக்க விளையாட்டுத் துறையின் மேற்பார்வையும் ஆதரவும் இல்லாத நிலையில்; எழுச்சியூட்டிப் போட்டியில் உத்வேகம் அளிக்க தேசியக் கொடியோ, தேசிய கீதமோ இல்லாத நிலையில், ரஷ்ய விளையாட்டு வீரர்கள் பெரிதாகச் சாதிக்க முடியாது என்றே நம்பப்படுகிறது.

● இவை ஒருபுறமிருக்க, ஒலிம்பிக்ஸ் போட்டிகளில் வெற்றி மட்டுமே முக்கியமில்லை. பங்கேற்பதும் போராடுவதும்தான் மிக முக்கியம் என வலியுறுத்தப் பட்டும் வருகிறது. இந்த சித்தாந்தத்தை மெய்ப்பித்த ஒரு சம்பவம் மெக்ஸிகோ ஒலிம்பிக்ஸில் அக்டோபர் 20, 1968 அன்று நடந்தது :



26 மைல் - 385 கஜ தூர மாரதான் ஓட்டப் பந்தயத்தில் எத்தியோப்பிய வீரர் மாமோ வோல்ட் ஜெயித்து விட்டார். ஓட ஆரம்பித்த போது இருந்த அதே புத்துணர்ச்சியுடன் பந்தயத்தின் இறுதி வரை காணப்பட்ட அவரைத் தோளில் தூக்கிப் பாராட்டி ஒரு மணி நேரம் ஆகி விட்டது. மாரதான் பந்தய முடிவுக் கட்டத்திலிருந்த பார்வையாளர்கள் கலைந்து போக இருந்த சமயத்தில் திடீரென்று பரபரப்பு... அவசர மருத்துவ உதவி அழைக்கப்பட்டது. காவல் துறை விசில்கள், சைரன்கள் ஒலித்தன.

அந்தத் திக்கில் திரும்பிய பார்வையாளர்கள், டான்ஸேனிய நாட்டு யூனிஃபார்ம் அணிந்த ஓட்ட வீரன் ஜான் ஸ்டீஃபன் அக்வாரி, காயம் பட்ட காலில் கட்டுடன், ரத்தம் சொட்டச் சொட்ட ஓடி வருவதைக் கண்டார்கள். முழங்காலில் பலமான காயத்துடன் இறுதிக்கட்டம் வரை ஓடி முடித்த அந்த வீரனைக் கூட்டம் கை தட்டி வாழ்த்தி, பாராட்டியது. அவன் திரும்பியும் பாராமல் சோர்வுடன் வெளியேறினான்.

'மனித இயலின் மிக உன்னதமான ஒரு கோணத்தை இன்று அந்த டான்ஸேனிய இளைஞன் உணர்த்தினான்' என்று ஒரு செய்தித்தாள் எழுதியது.

'பரிசு பெறும் வாய்ப்பை இழந்த பின்னரும் இவ்வளவு வேதனையுடன் ஏன் இறுதிவரை ஓடினீர்கள்?' என்று அக்வாரியிடம் கேட்கப்பட்ட போது அவன் சொன்னான் :

''என் நாடு, ஏழாயிரம் மைல் கடந்து இவ்விடத்துக்கு என்னை அனுப்பியது ஒரு போட்டியை ஆரம்பித்து வைப்பதற்காக அல்ல; அதில் இறுதி வரைப் பங்கேற்கத்தான் என்னை அனுப்பியது.''









SAM PO MEAT STORE




## அட, அப்படியா!

!! சர்ச்சுகளில் 'altar' எனப்படும் பீடம், கட்டடத்தின் கிழக்கு முனையிலேயே பெரும்பாலும் இருக்கும். சூரியோதயம் ஆகிற திக்கு நோக்கி நாம் இருப்பது, ஆன்மிக ஒளியின் உதயத்தை நோக்கி இருப்பதைக் குறிக்கும் என்பது பரம்பரையான நம்பிக்கை.

!! Onion என்பது வெங்காயத்தின் ஆங்கிலப் பெயர். இது 'unio' என்ற லத்தீன் மொழிச் சொல்லிலிருந்து உருவானது. 'Unio' என்றால் 'பெரிய முத்து' என்று பொருள்!



# கண்ணீர்த் துளிகளும் வெங்காயமும்

!! வெங்காயம் நறுக்கும் போது கண்ணிலிருந்து நீர் வருவது ஏன்? அதிலுள்ள எண்ணெய்ச் சத்துதான் காரணம். மிக ஸ்ட்ராங்கான இந்த எண்ணெய்ச் சத்துதான் வெங்காயத்தின் ருசிக்கும் காரணம். வெங்காயம் வெட்டப்படும்போது எண்ணெயிலிருந்து 'வாயு வெளிப்படுகிறது. அது மூக்கின் உள்ளே இருக்கும் மென்மையான திசுக்களைத் தாக்குகிறது. அதன் தொடர் விளைவாகத்தான் கண் எரிகிறது. எனவே வெங்காயம் உண்மையில் மூக்கைத்தான் பாதிக்கிறதேயொழிய கண்ணை அல்ல!

!! உலகச் சந்தையில் மிக அதிகமாக விற்கப்படும் பொருள் பெட்ரோலியம். அதற்கு அடுத்த இடத்தைப் பிடிப்பது காப்பி!

!! ஒரு டம்ப்ளர் பாலில் உள்ளதைக் காட்டிலும் அதிகமான திரவம் ஒரு தக்காளியில் உள்ளது!

!! தேன் உடம்புக்கு மிகவும் நல்லது என்று சொல்வார்கள். உண்மையில், தேனில் சத்து வெகு குறைவு. தண்ணீர் தவிர, fructose, (பழச் சர்க்கரை) மற்றும் குளுகோஸ் மட்டுமே இதில் பிரதானமாக உள்ளன.

!! உலகின் மிகப் பிரபலமான பானம் கோக கோலா. நாளொன்றுக்கு 165 மில்லியன் பாட்டில் கோக கோலா உலகின் பல பகுதிகளிலும் விற்பனையாகிறது.




!! An apple a day keeps the doctor away என்பது ஆங்கிலப் பழமொழி. ஆனால் ஆப்பிளில் உள்ள பத்து மில்லி கிராம் விட்டமின் 'சி'யைப் போல் ஐந்து மடங்கு ஒரு ஆரஞ்சில் உள்ளது. ஆப்பிளில் சர்க்கரை (12 கிராம்) அதிகம்.

!! வெண்ணெயை ஃப்ரிஜ்ஜில் வைக்காமல் இருந்தால் கூட ஒரு வருடத்துக்கு அது கெட்டுப் போகாது - இப்பெத் தேசத்தில், ஈரப்பதமற்ற வறட்சியான சீதோஷ்ணம் நிலவுவதால் இங்கு தானியங்களும் ஐம்பதாண்டு வரை கெடாமல் இருக்கும்.

தொகுப்பு : உதய்லால்

ஒய். ஜி. பி., பட்டு - இந்த இரு மூன்றெழுத்துக்காரர்களும் சேர்ந்து ஆரம்பித்த மூன்றெழுத்து நாடகக் குழு தான் யு.ஏ.ஏ. என்ற 'யுனைடெட் அமெச்சூர் ஆர்ட்டிஸ்ட்ஸ்'. 45 நாடகங்களை மூவாயிரம் தடவைகளுக்கும் மேல் நடத்தி, நாற்பது ஆண்டுகளாய் வெற்றிகரமாய் இயங்கி வரும் இக்குழுவைப் பற்றி, இதனுடன் தொடர்பு கொண்டவர்களுடைய மலரும் நினைவுகள் :



● [illegible] சிலர் இருப்பதைக் காணலாம்.

# யு.ஏ.ஏ - 40

***திருமதி ஒய். ஜி. பி.*** : மேடையில், இலக்கியத் தமிழ் முழங்கிக் கொண்டிருந்த காலகட்டத்தில், ரசிகர்களுக்குப் புரியும் வகையில் எளிமையான முறையில், பேச்சுத் தமிழை முதன் முதலாய்ப் பயன்படுத்தியது யு.ஏ.ஏ.தான். ஆண்கள், ஸ்திரீ பார்ட் போட்ட அந்தக் காலத்தில், பெண்களையே மேடையில் யு.ஏ.ஏ. நடிக்க வைத்த போது, ''பெண்களே மேடையில் பெண் வேடம் போடறாங்க'' என்று வியந்து பேசுவார்கள் மக்கள்.

***மௌலி*** : யு. ஏ. ஏ. வுக்காக நான் எழுதிய நாடகம் 'ப்ளைட் 172'. அதில் நானும் நடித்தேன். கதையில் குடுமி வைத்து ஒரு கேரக்டர். ஒரு காட்சியில் அவருடைய தலையில் ஓங்கி ஒரு குட்டு வைக்க வேண்டும். அப்படிக் குட்டி விட்டுக் கையை எடுக்கும் போது, குடுமி விக் கையோடு வந்து விட்டது. ரசிகர்கள் சிரிக்க ஆரம்பித்து விட்டார்கள். எப்பேர்ப்பட்ட சந்தர்ப்பத்திலும், நடிப்பால் மக்களைத் தான் சிரிக்க வைக்க வேண்டுமேயொழிய, மேடையில் நாம் சிரிக்கக் கூடாது என்ற தீவிர கொள்கையுடைய ஒய்.ஜி.பி.யாலேயே அந்தச் சமயத்தில் சிரிப்பை அடக்க முடியவில்லை. திரையை இறக்கி விட்டு, சிறிது நேரம் கழித்து, மறுபடி நாடகம் தொடர்ந்தது.



● குருக்ஷேத்ரம் : மகேந்திரன், ஏ. ஆர். எஸ்.

***ஸ்ரீகாந்த்*** : யு.ஏ.ஏ. குழுவில் நடித்துக் கொண்டிருந்த ஏ. ஆர். எஸ். உத்தியோக நிமித்தம் சிறிது காலம் கல்கத்தா செல்ல வேண்டியிருந்தது. அப்போது, அவருக்கு 'சப்ஸ்டிட்யூட்' ஆக நான் உள்ளே நுழைந்தேன். நாளடைவில் சினிமாவில் பிஸியாகி விட்டேன். ஒய். ஜி. பி.க்கோ, நாடக தினங்களில் நாலரை மணிக்கெல்லாம் நடிப்பவர்கள் அனைவரும் அரங்கில் ஆஜராகி விட வேண்டும். சில நாட்களில், எனக்கு ஷூட்டிங் காரணமாய் லேட்டாகி விடும். இது அவருக்குப் பிடிக்கவில்லை. ஒருநாள் திடீரென்று நாலு மணிக்கெல்லாம், ஸ்டூடியோவுக்கு வந்து, ''உன்னைக் கையோடு கூப்பிட்டுக் கொண்டு போகத்தான் வந்திருக்கிறேன்'' என்றார். அன்றைக்கு

மட்டுமில்லை, அதன்பின், ஷூட்டிங் தினங்களில் நாடகம் இருந்தால் நாலு மணிக்கெல்லாம், என்னை அழைத்துப் போக, ரெடியாய் வந்து விடுவார்!

**ஏ.ஆர்.எஸ். :** வியட்நாம் வீடு சுந்தரம் எழுதின 'நலம்தானா' என்ற நாடகம் கிருஷ்ணகான சபாவில். பிரேமா என்ற நடிகை எனக்கு ஜோடி. இடைவேளைக்கு அப்புறம்தான் நாங்கள் நடிக்க வேண்டிய காட்சிகள். எனவே ஒய்.ஜி.பியிடம் ஸ்பெஷலாய் பர்மிஷன் வாங்கிக் கொண்டு, தினமும் எட்டு மணிக்கு ஆடிடோரியம் வந்து விடுவார் பிரேமா. ஒருநாள் எட்டு மணிக்கு அவர் வரவில்லை. எங்களுக்கு டென்ஷன். சிறிது நேரத்தில், காலில் அடிபட்ட அவர், டாக்சியில் வந்து சேர்ந்தார். அவரால் நடக்க முடியவில்லை. நடிக்கவும் முடியாது என்பதுதான் நிலைமை. இடைவேளையைக் கொஞ்சம் நீட்டினோம். என் நண்பன் பாத்திரத்தில் நடித்த மௌலியைக் கூப்பிட்டேன். பிரேமா பேச வேண்டிய கருத்துக்களையெல்லாம் மௌலியின் வசனத்திலேயே சேர்த்து, பிரேமா பாத்திரத்தை மேடையில் தோன்றாத பாத்திரமாய்த் திருத்தி அமைத்தோம். நாடகத்தை முதல் தடவை பார்த்தவர்களுக்கு வித்தியாசமாய் ஏதும் தெரியவில்லை என்றாலும், ஏற்கெனவே பார்த்த நண்பர்கள், ''புதுசாய் ஏதோ மாத்தியிருக்கீங்களே இப்போது?'' என்று கேட்டார்கள்.

**ஒய். ஜி. மகேந்திரன் :** 'மிஸ்டர் பரத்வாஜ்' என்று ஒரு நாடகம். ஒரு காட்சி முடிந்து, விளக்குகள் அணைக்கப்பட்டு, திரை இறக்கப்பட்டது. அடுத்த காட்சிக்கான பின்னணி செட் நகர்த்தப்பட்ட போது, அது என் முகத்தில் பட்டு, வலது கண்ணுக்கு அருகே பலமான அடி! ஒரே வலி. அவ்வளவுதான் நமக்கு ஒரு கண் போச்சு!' என்று நினைத்துக் கொண்டு விட்டேன். லேசான மயக்கம். சிறிது நேரத்தில் சுதாரித்துக் கொண்டேன். ஐஸ் கட்டி வைத்த கர்சீப்பை கண்ணுக்குப் பக்கத்தில் வைத்தபடியே, மீதி நாடகத்தை நடித்து முடித்து விட்டு, நேரே கண் டாக்டரிடம் ஓடினேன். கண்ணைப் பரிசோதித்து விட்டு, ''உடனே வர வேண்டாமா? இவ்வளவு வீங்கியிருக்கிறதே! கண்ணை விட, கலை உனக்கு முக்கியமா?'' என்று திட்டினார். ''ஆயிரம் ரசிகர்களின் கோபத்தைத் தாங்கறதை விட உங்க ஒருத்தர் கோபத்தைச் சமாளிக்கிறது சுலபமில்லையா?'' என்றேன். டாக்டர் சிரித்து விட்டார்.

**நாகேஷ் :** ஆரம்ப நாட்களில் மிகச் சிறிய ரோல்கள்தான் எனக்குக் கொடுப்பார்கள். 'எமன் ஏமாந்தால்' நாடகத்தில் எமகிங்கரர்களில் ஒருவன் நான். அவ்வப்போது ஓரிரு வசனங்கள் பேச வேண்டும். அவ்வளவுதான். அப்படி ஒரு காட்சியில், நானாகவே, இரண்டு வரி வசனத்தைச் சேர்த்துக் கொண்டு, அதையும் பேசி விட்டேன். அந்த டயலாக்கைக் கேட்டதும், அரங்கத்தில் ஒரே அப்ளாஸ். காட்சி முடிந்து, திரை இறங்கியதும், ஒருவர் வந்து, ''ஒய். ஜி. பி. உன்னைப் பார்க்க வேண்டுமாம்'' என்றார். எனக்கு உதறல் எடுத்தது. சொல்லிக் கொள்ளாமல், வீட்டுக்குப் புறப்பட்டுப் போய் விட்டேன். மறுநாள் காலை கதவைத் தட்டினார் ஒய். ஜி. பி. ''படவா! சமயோஜிதமா நீயே வசனம் பேசினதைப் பாராட்டி இரண்டு வார்த்தை சொல்லணும்னு நேத்தி வரச் சொன்னா. சொல்லிக்காமலேயே வந்திட்டியே'' என்றார். மனம் பூரிப்படைந்தது.

தொகுப்பு : எஸ். சந்திரமௌலி

---

விளம்பரங்களில் வரும் ஐஸ்கிரீம்கள்
கெட்டியாக, பார்ப்பதற்கு
மிகவும் அழகாக இருக்கும்.
உண்மையில் இது போலி ஐஸ்கிரீம்.
உருளைக் கிழங்கை அவித்து நன்கு
பிசைந்து, அதில் கிரீம்
தடவி விடுவார்கள். கடையில் சென்று
வாங்கினால், விளம்பரங்களில்
பார்த்தது போல் இராது.
மதுரை வானொலியில் கூறக் கேட்டவர் :
என். ஜெயராமச்சந்திரன்

# முற்றுகை

## சென்ற வாரம்...

தீப்பெட்டித் தொழிற்சாலையில் மாதக் கூலிக்கு வேலை செய்த அருஞ்சுனை அந்தத் தொழிற்சாலைக்கே முதலாளி ஆனான். அதற்கு அவன் தன்னையே விலையாகத் தர வேண்டியிருந்தது. ஆம்! அழகும் கம்பீரமும் மிக்க அவன், தொழிற்சாலை உரிமையாளரின் அழகற்ற மகளை மணந்தான். மனத்துக்குள் அவளைக் காழ்ப்புடன் வெறுத்தான். போலித்தனமாய், அன்பொழுக, பரவசமாவது போல் நடித்தான்.

மாமனார் காலமாகி விட்டார்; அவர் செல்வமும் செல்வாக்கும் இவனுடையவையாகி விட்டன... ஆனாலும் தாம்பத்யம் மனத்துக்கு இனிக்கவில்லை; குழந்தையும் பிறக்கவில்லை; வாழ்க்கையில் நிறைவில்லை.

ஒருநாள் மாலை அரிதாக அவன் நேரத்தோடு வீடு போகவும் மனைவி ரத்னம் பூரித்தாள்; அவனை உபசரித்தாள். வழக்கமான போலித்தனத்துடன் அதை ஏற்று அவன் மீண்டும் தொழிற்சாலைக்குப் புறப்பட்ட போது மனம் சொர்ணத்தைப் பற்றி எண்ணியது. சொர்ணம் அவன் தொழிற்சாலையில் வேலை செய்பவள். 'மண்வாசனை' ரேவதி போல் பேரழகி. அழகுடன் கர்வமும் அவளிடத்தில் தூக்கல். 'அவள் கர்வப்படுவதில் நியாயம் இருக்கிறது' என எண்ணினான் அருஞ்சுனை.

## 2

கங்குல் மங்குகிற நேரம். வைகறைப் பொழுது. தாய் வீட்டைப் பிரிய மனசில்லாமல் தயங்குகிற புதுமணப் பெண்ணாக, இருட்டு நகர மறுத்துக் கொண்டிருந்தது.

பால் பீய்ச்சுவதற்கு எருமை மாடுகளைப் பால் சொஸைட்டிக்குப் பத்திக் கொண்டு போகிற சப்தம். கொக்கு நோயில் சாகாமல் தப்பித்த சேவல்களின் காலைக் கூவல். வேலாயி வெளியே வந்து நின்றாள். நரைத்த ரோமக்கற்றைகளை அள்ளி முடிந்து கொண்டே, எச்சிலைத் துப்பினாள்.

கீழடி வானத்தில் ஜொலிப்புடன் ஒளி விடுகிற ஒற்றை நட்சத்திரம். வானம் முகம் வெளுத்துப் போயிருந்தது.

விடிந்தும் விடியாத இந்தப் பொழுதில்தான்... ராமானுஜத்தின் வில் வண்டி வாசலில் வந்து நிற்கும். சின்னக் காளைகள் ரெண்டும் துடியாய் நிற்கும். அதன் நெற்றியில் சலங்கைச் சரம். கழுத்துக்களில் மணிகள் கோக்கப்பட்ட வார்கள். மாடு குலுங்கினால், சலங்கைகள் சங்கீதம் பாடும்.

அந்தச் சின்னஞ்சிறு கூட்டு வண்டியிலிருந்து ஆஜானுபாகுவாய் ராமானுஜம் இறங்குவார். தங்க நிறம். ஓங்குதாங்கான தோற்றம். ஜமீன்தார் மாதிரியான கம்பீரம். கண்டவர் எவரும் அரண்டு போவார்கள். அப்படியோர் தாட்டியம்.

நடந்தால்... செருப்பாணிகள் 'சர்ர்குக், சர்ர்குக்'கென்று கர்ஜித்து அச்சுறுத்தும்.

'எந்த வீட்டில் இன்றைக்கு வாசமோ' வேலாயியால் கேட்க முடியாது. கேட்டால்... தொலைந்தாள்.

''பொட்டக் கழுதைகளுக்கெல்லாம், என்ன கேள்வி?'' என்ற வார்த்தைக் கத்திகளோடு, சாட்டைக் கம்பும் சேர்ந்து பேசும்.

கணக்கு வழக்கு இல்லாத காடுகரைகள். நிதானமில்லாத வருமானம். சமுத்திரமாய்ச் செல்வம் அலைமோதுகிற பெருத்த சம்சாரிக் குடும்பம். ஊரிலேயே மேல்கை. ஊரில் மட்டுமல்ல, சுற்றுப்பட்டி பத்து ஊர்களிலும் இந்தக் குடும்பம்தான் மேல்கை.

எத்தனை வைப்பாட்டிகளுக்கு ஏற்றம் போட்டு இறைத்தாலும், வற்றாத சமுத்திரச் செருக்கு!

அவர் வண்டியில் வந்து இறங்கினால்... வண்டி முகக் காலைப் பிடிக்க ஓர் ஆள். காளை மாடுகளைத் தொழுவத்திற்குள் கொண்டு செல்ல ஓர் ஆள்.

தொழுவத்திற்குள் பசு மாடுகள், காளை



மேலாண்மை பொன்னுச்சாமி

மாடுகள், உழவு மாடுகள், எருமை மாடுகள். தொழுவம் கொள்ளாமல் நிறைந்து ததும்புகிற கால்நடைச் செல்வங்கள். அதன் வெது வெதுப்பான பெருமூச்சு இரைச்சல்கள், சுவர்களில் மோதி எதிரொலிக்கும்.

இப்போது -

தொழுவம் கழுவி வைத்த அண்டாவைப் போல... 'ஹோ'வென்கிற வெறுமையாக - சுத்த சூன்யமாய் - ஜீவ களை அற்றுப் போய் - வெறும் சுவரும் பிய்ந்த கூரையுமாய் -

செத்த சவமாய் - தொழுவம்.

முற்றம் தெளிக்கிற சாணத்துக்குக் கூட அடுத்தவன் தொழுவத்துக்கு அலைய வேண்டியிருக்கிறது...

தெரு முழுக்க அத்தனை பேரும் சாணி யள்ளிக் கொண்டு போவார்கள். முற்றம் தெளிக்க, வீடு மெழுக, கூடைக் கண் மறைக்க என்று அள்ளிக் கொண்டு போனது போக, கிடக்கிற மிச்சத்தை அள்ளிக் குப்பை சேர்க்க நாலு ஆள் ஆகும்.

சாக்கை 'கொங்காணி' போட்டுத் தலையில் போட்டுக் கொள்வார்கள். முதுகு முழுக்க சாக்கு பரவி மூடிக் கொள்ளும். தலையில் தூக்கி வைத்துச் சுமக்கிற கூடையிலிருந்து வழிகிற மூத்திரக் கழிவிலிருந்து காப்பாற்றுகிற கவசம்தான், அந்தக் 'கொங்காணி'.

வீட்டில் எந்நேரமும் பத்தாள் வேலை செய்யும். அடுப்பில் மொடாப்பானையில் சோறு வெந்து கொண்டேயிருக்கும். வந்தவர்கள், போனவர்கள், வேலைக்காரர்கள், காவல்காரர்கள் என்று எந் நேரமும் பந்திதான். பரிமாறல்தான். ஏப்பம்தான்.

உண்டு முடித்த திருப்தியில் வாயார வாழ்த்துகிற ஜனங்கள். ''தருமவான் வீடு...'' ''புண்ணியவான் கோவில்...'' ''இப்பேர்ப்பட்ட தர்மதுரையோட வம்சமே தொட்டது துலங்கி, பட்டது பா ர்த்து.



'ஓகோ'ன்னு இருக்கணும். வறுத்த காணம் வெதைச்சாலும், செழிக்க மொளைக்கணும்.''

மனசார வாழ்த்திய சத்தங்கள் இதோ... இப்பவும் காதில் கேட்குதே. இப்பத்தான் சொல்வது போல இருக்கிறதே...

ஊ...ம்...

அப்பேர்ப்பட்ட வீடு. இப்போ -

செல்வம் பொழிந்து, சீரகச்சம்பா விளைந்த வீட்டில், வீடு முழுக்க நிறைந்து நிற்கிற தரித்திரம். ரெண்டு ஜீவனுக்குக் கஞ்சிக்கு வழியில்லை. ரெண்டு வயிறு களைக் கழுவுவதற்கு என்ன பாடு பட வேண்டியிருக்குது?

எப்படி ஆயிற்று?

காலம் என்னமாய்க் கண்ணாமூச்சி காட்டி, குரூரமாய் விளையாடுகிறது?

''ம்ச்சு'' என்று பெருமூச்சோடு சூள் கொட்டிக் கொண்டாள் வேலாயி.

''எல்லாம்... அந்தக் குருட்டுப் பய கூத்துவன் பண்ணுகிற கூத்து. இன்னும் என் னென்ன கூத்தெல்லாம் நடத்திப் பாக்கப் போறானோ...''

முற்றத்தில் சாம்பல் போட்டு மினுக்கி முடித்த பாத்திரங்களை விரலுக்கு இரண் டாக இடுக்கிக் கொண்டு எழுந்தாள்.

மூட்டுக்கள் வலிக்கிறது. எழும் போது, முழங்கால் மூட்டு எல்லாம் 'மொறு, மொறு'வென்கிறது.

உள்ளே வந்தால்... கழுவிக் கவிழ்த்த பானையைப் போல சூன்யமாய் வீடு. பெரிய்ய வீடு. ஆறு தலைக்கட்டுகள் அடுப்பு கூட்டிக் குடும்பம் நடத்தலாம்.

முன்பு -

இந்த வீட்டில் கால் வைக்க இடமிருக் காது. வீடு நிறைய நான்ய மூட்டைகள், உளுந்து மூட்டைகள், பருத்தி அம்பாரம். மூலை மூலைக்கு விதைப் பண்டங்கள். கலப்பைகள், வடங்கள், ஏர்க்கால்கள், சாட்டைக் குச்சிகள், பட்டை வார்கள், வண்டிப் பைதாவின் குடங்கள், பாரக் கயிறு கள் என்று வீடு முழுக்க மரச் சாமான்கள். இரும்புச் சாமான்கள்.

கால் வைத்த இடமெல்லாம் சாமான் கள் கிடந்து சீரழியும். இன்றைக்கு...

எல்லாம், எப்போதோ கண்ட பழங் கனவாகி... மனசின் ஆழத்தில் காயமும் வடுக்களும் மிஞ்ச... வீடு முழுக்க வறுமை யும் அவலமும் சமணக்கால் போட்டு உட்கார்ந்து கொள்ள..

அடுப்பங்கரைக்குள் நுழைகிற போது, திண்ணையில் சுருண்டு படுத்துக் கிடக்கிற சொர்ணத்தைப் பார்த்த வேலா யிக்கு எரிச்சல் பற்றிக் கொண்டு வந்தது.

'என்ன இது. இந்தக் கழுதை இன்னும் படுத்துக் கிடக்கு!'

அந்த எரிச்சல் கத்திய கத்தலில் தெறித் தது.

''ஏண்டி, பொழுது பொறப்படப் போவுதுடி, பொட்டச்சி இன்னும் ஒறங் குவா... எப்படி? எந்திடி.''

அதட்டலாய் எழுப்பி விட்டு விட்டு, விளக்குமாறை எடுத்தாள். கடலாய் விரிந்து கிடந்த வீடு பூராவையும் பெருக்கி, ஓரிடத் தில் ஒதுக்கி, கூடையில் அள்ளிக் குப்பை யில் கொண்டு போய்ப் போட்டு விட்டு வந்தாள் வேலாயி. இருட்டு சாம்பல் நிற மாய் வெளுக்கிறது.

இன்னும் சுருண்டு கிடக்கிற சொர்ணம். வேலாயிக்கு 'வெளம், வெளமா'க வந்தது.

'அடிப்பாதகத்தி, ஒனக்கு இன்னைக்கு என்ன கேடு வந்துச்சு? இப்படிப் படுத்துக் கிடந்து உசுரைப் பிடுங்குறே? தீப்பெட்டி யாபீஸுக்குப் போக வேண்டாமா?'

அவளுக்குள் வெடித்துக் கொண்டு வந்த கோப நினைவுகள். உஷ்ணமாய்க் கொட்டி விட முடியாது. வெளியில் முகம் காட்டத் தயங்குகிறது.

செல்ல மகள். சின்ன மகள். ஒன்றரை மைல் நடந்து போய்... தீப் பெட்டியாபீ ஸிலே பசை தடவி பெட்டி ஒட்டி, உலை கொதிக்க வழி காட்டுற நாச்சியாள். எப்படிக் கோபிப்பது?

உள்ளடங்கிய உணர்வுகள். நேர உணர்வு தெரியாமல், இப்படிப் படுத்துக் கிடக்கிறாளே...

சீறிக் கொண்டு சீறிடுகிற கோப உணர்ச்சி.

''ஏய், சொர்ணத்தாயீ... வெளக்கு மாத்துத் தாயீ''

''என்னம்மா?'' வெடுக்கென்று வார்த் தையாய் எகிறுகிற சொர்ணம். அம்மாவின் நச்சரிப்பைச் சகித்துக் கொள்ள முடியாத கண்டனம், அவள் கண்களில்.

வேலாயியின் மனசுக்குள் ஒரு திகைப்பு. உள்முகமாய்த் திரும்புகிற நினைவு.

'மகள் வம்புக்குப் படுத்திருக் கலைபோ... ஏதோ நியாயம் இருக்கோ... ஒருவேளை, உடம்புக்கு ஏதாச்சும்.'

பெற்ற மனம் திடுக்கிட்டது. குரலில் ஒரு நடுக்கம். சொல்லில் வந்து உட்கார்ந்த குழைவு. சின்னதாகப் பதைப்பு.

''டூ-வீலர் கேட்டேன், என் மாமனார் த்ரீ-வீலரே வாங்கித் தந்துட்டார்!''

''அட்டேடாதானே?''

''வெங்காயம்! பிறக்கிற குழந் தைக்கு யூஸாகும்னு, மூணுச் சக்கர 'கட்டை நடைவண்டி' வாங்கித் தந்துட் டார்யா!''

– சேலம் நீலமேகம்

"அம்மா... ஒடம்புக்கு என்னமும் செய்யுதா?"

"ஒரு எழவுமில்லே. ஒடம்பு குத்துக் கல்லாத்தான் இருக்கு."

"ஏண்டி இப்படி 'வெடுக், வெடுக்'குன்னு புடுங்குறே? வேலைக்குப் போக வேண்டிய புள்ளை இப்படிச் சுருண்டு கெடக்குதேன்னு.. பதறிப் போய்த்தானடி நா நச்சரிக்கேன்?"

அம்மாவைப் பார்த்தாள் சொர்ணம். உடைந்து போயிருக்கிற அம்மா. பெற்ற மகளிடம் கூட சொந்த உணர்ச்சியைக் காட்ட முடியாமல் பதறிப் போய் நிற்கிற அம்மா. கெஞ்சுதலோடு பரிதாபமாய் நிற்கிற அம்மா..

சொர்ணத்திற்குள் நனைந்த நிலமாய்க் குமுறுகிற நினைவுகள். பதற்றத்தைக் குறைக்கணும். குளிர்ச்சியான வார்த்தைகள் சொல்லணும்.

ஆனாலும் அவள் பிறவிக் குணம், அவள் சொற்களில் தெறித்தது. மெல்லிய குரலில் அதே கடுப்புடன் கூறினாள்.

"ஒண்ணுமில்லே. பொண்ணா ஜெம்மமெடுத்த பாவத்துக்கு அனுபவிக்கிற அந்தத் 'தொல்லை'தான்"

"அப்ப... இன்னிக்கு நீ வேலைக்குப் போக வேண்டாம்மா. குளிச்சிட்டுப் போசாம, வீட்லே இரு."

"இல்லே போகணும்."

"வேண்டாம்மா... வீட்லே இருடி."

அம்மாவை எரிப்பது போலப் பார்த்தாள்.

"இதுக்கெல்லாம் லீவ் போட்டுட்டா, வீட்லே எப்படி உலை கொதிக்கப் போகுது? வீடு நிறைய செல்வம் குமிச்சி வைச்சிருக்கிறாக்கும்?"

'அப்பன் குணம் அப்படியே ரத்தத்துலே ஓடுது. அதே திமிரு அதே கருவம்.'

வேலாயி மனத்தில் ஓடிய இந்த நினைவில் ஒரு பெருமிதம் இருந்தது. சந்தோஷம் இருந்தது. புருஷனை மகள் வடிவில் பார்க்கிற உள் மனத் திருப்தி.

சோர்வான பெருமூச்சோடு எழுந்தாள், சொர்ணம். அவள் முகத்தில் அயர்ச்சி. நனைந்த காகிதமாகத் துவள்கிற உடம்பு. வாட்டம். வேரறுந்த கொடி வெயிலைச் சந்தித்த மாதிரி வாட்டம்.



பெற்ற தாய்க்குக் குலையெல்லாம் பிடுங்கிக் கொண்டு வந்தது. மனசைப் பிசைந்து கொண்டு வெளிப்படுகிற அழுகை. மூக்கினில் வந்து அலைகிற அவலத்தின் கொடூரம்.

"அடக் கூத்துவனே, இந்தப் பாதரவை பாக்குற வங்கொடுமைக்கா என்னை உசுரோட வுட்டு வைச்சிருக்கே? எந் தங்கப் பெட்டியைத் தூக்கிட்டுப் போனியே... என்னோட ஒலையைக் இறுக்க மட்டும் ஒனக்கு நேரமில்லாமப் போச்சாக்கும்?"

கெகெத்த குரலில் முணுமுணுக்கிற அவள் வார்த்தைகளைத் துண்டுத் துண்டாக உடைக்கிற அழுகைத் திமிறல்.

அடுப்பங்கரைக்குள் நுழைந்தாள். அடுப்புக்கு வெளியே கிடந்த கங்குகளையும் விறகையும் உள்ளே தள்ளினாள். அந்தச் சின்ன முக்காலியில் உட்கார்ந்து, சுவரில் சாய்ந்த வேலாயி, குமுறிக் குமைந்த உணர்ச்சியெல்லாம் தனிமைச் சுதந்திரத்தில் பீறிட.... கொதிக்கிற மனசோடு தலையில் 'மடேர் மடேர்'ரென்று அடித்துக் கொண்டாள்.

"எந்தங்கப் பெட்டி.... ராசா போல நீங்க இருந்த இருப்பு என்ன, நடந்த நடை என்ன! சொர்ணத்தைத் தூக்கி வச்சு என்னமாய்க் கொஞ்சுனீக? எங்க எங்கேயோ கொண்டு போய், சீமைப் படிப்பெல்லாம் படிக்க வைச்சு, டாக்டராக்கணும்னு வாய்க்கு வாய் பெருமையாய்ச் சொல்லுவீகளே... மனசைத் தூசியாக்கி ஊதி விட்ட மாதிரி, குடும்பத்தையே சீரழிக்கட்டுப் 'போய்ச்' சேந்துட்டீக. இந்தப் பாழாய்ப் போற பொழப்புலே எங்களை மட்டும் தவிக்க விட்டுட்டீகளே...

"ஏழு ஊரு அழகையும் தேகத்துலே அள்ளிப் பூசிக்கிட்டு, என் வயித்துலே வந்து பொறந்த பொன்னுரதம். இப்ப சீரழியிற கோலத்தைப் பாத்தீகளா? ஒவ்வொரு மைல் நடந்து போய் பனையும் தாலுமாய்ப் பகலெல்லாம் பெட்டி ஓட்டி, வாங்குற கூலியிலே வயிறு நனையுது...

"அடப் பாதரவே, செல்வம் பொழிஞ்ச சீரகச் சம்பா விளைஞ்ச இந்தக் குடும்பத்துக்கும் இப்படியோர் கதியா? அடக் குருட்டுப் பய தெய்வமே, ஒனக்கு இதுவும் சம்மதமா?"

வேலாயியின் மனசுக்குள் தளதளத்துக் கொதித்து ஆற்றுகிற அவல நினைவுகள். முனகலும் அழுகையுமாய், நிலைகுலைந்து அங்கலாய்ப்பாகக் கசிகிற துன்பம். மூக்கைச் சீறிச் சுவரில் இழுவினாள். அழுகை அழுகையாக இருந்தாலும், சமையல் நடந்தாகணும்.

மகளை வேலைக்கு அனுப்பி வைக்க வேண்டுமே. தாட்சண்யமற்ற ராட்சஸனாக வாழ்க்கை சுற்றிச் சுற்றி வட்டமடிக்கிறதே...

(தொடரும்)



# தூரத்துப்

**எ**திர்பாராத மாசக்கடைசியில் கணேசன் விருந்தாளியாக வீட்டுக்கு வந்தான். விஸ்வம் மலைத்துப் போனான். மாசக் கடைசியில் கூட ஒரு ஆள், விருந்தாளி! எப்படியும் கூட ஒரு கூட்டு, ரசமாய் ஒவ்வொரு குழம்பு வைக்க வேண்டும். விருந்தோம்பல். வள்ளுவர் மீது கோபம் வந்தது.

நாராயணமுதலியிடம் கடனாகப் போன வாரம் வாங்கின இருநூறு ரூபாயில் முக்கால்வாசி காலியாகி விட்டது. குழந்தைக்கு ஆஸ்பத்திரி செலவு, மருந்து, ஹார்லிக்ஸ். மீதி ஐம்பது ரூபாய் இருக்கிறது. இன்னும் ஏழு நாட்கள். ஒரு நாளுக்கு ஐந்து ரூபாய் என்றால் ஏழு நாளுக்கு எவ்வளவு? மனசு தப்பிதமில்லாமல் அடித்தல் திருத்தல் இல்லாமல் கணக்குப் போட்டது. பிறகு பால், இத்யாதி செலவுகள். கடவுளே, காப்பாற்று!

ராஜி மெதுவாக உள்ளே கூப்பிட்டாள்.

''என்ன சமைக்க?''

''ஏதாவது வை.''

''வராதவங்க வந்திருக்காங்க. ஏதாவது வைனா எப்படி?''

''மாசத் தொடக்கத்துல வந்திருக்கணும். பிரியாணி செஞ்சிப் போட்டிருக்கலாம். இது லேட். எங்க முடியும் ராஜி?''

''யார்ட்டயாவது வாங்குங்க.''

''வாங்கு வாங்குன்னா... எப்படி முடியும்? எத்தனை பேர்ட்ட வாங்க முடியும்.''

''ஷ்... உரக்கப் பேசாதீங்க. கேட்டுடப் போகுது.''

''கேட்டா கூட நல்லதுதான். எதிர்பார்க்க மாட்டான்.''

''நாம ஒண்ணும் குறைஞ்சிடல. ஏதாச்சும் செலவு அப்படி இப்படி ஆயிடுது. செத்தா போறோம். கிளம்புங்க.''

ஷர்ட் மாட்டிக் கொண்டு கிளம்பினான், கணேசனும் கூட வந்தான். ஷர்ட் மாட்டும் போது கூர்ந்து பார்த்த மாதிரி தோன்றிற்று. இருப்பதில் இது கொஞ்சம் பரவாயில்லை. மற்ற நாலும் காலர் பக்கம் லேசாக விட ஆரம்பித்திருக்கிறது.

**எ**ப்போதாவது மளிகைச் சாமான் லிஸ்ட் போக மீதி ரூபாய் இருந்தால் ராஜி சீட்டுகட்டி விஸ்வத்துக்குப் பனியன் வாங்குவாள். சேலைக்காரனிடம் சொல்லி வைத்து, ஒன்றிரண்டு ஷர்ட் தவணை முறையில் வாங்கியிருக்கிறாள். ரொம்ப சிக்கனம் என்றாலும் சில சமயம் பற்றாக்குறை விழும். இருபத்திரண்டாம், மூன்றாம் தேதிகளில் யாரிடம் கேட்க என்று கைபிசைய வைக்கும்.

விஸ்வம், கடையில் காய் வாங்கிக் கொண்டான். கணேசன் மூச்சுவிடாமல்

# ஏக்கங்கள்

தமயந்தி

பேசிக் கொண்டு வந்தான். புதுசாய் வாங்கியிருக்கிற பைக் பற்றி, மைலேஜ் பற்றி, முதன் முதலாய்க் கிளட்சை விடத் தெரியாமல் நிறைவது பற்றி... என் கவலைகள் இதில்லை கணேசன். உனக்கு எப்படி சோறு போடுவது என்பது பற்றி. எத்தனை நாட்கள் இருப்பாய் கணேசா? கேட்பது மரியாதையில்லை. நீயாய்ச் சொல்லி விட்டால் பரவாயில்லை. சொல்ல மாட்டாயா?

''மழை வர்றாப்பல இருக்கு. மன்னிட்ட குடை வாங்கிட்டு வந்திருக்கலாம்.''

குடை... ஆயிரம் பொத்தலோடு குடை. வேறு வாங்க வேண்டும், மாசாமாசம் நினைத்துக் கொள்வதோடு சரி. போன மாசத்துக் கடனை அடைத்து அடுத்த மாதச் சாமான்கள் வாங்கின பிறகு மிஞ்சுவது பஸ் செலவுக்கும் குழந்தைக்கும் சரியாகி விடும்.

''ஏன் பே ச மா ட் டே ங்கிற விஸ்வம்?''

''என்னவோ யோசனை..... என்ன சொன்னே?''

''தூறல் விழுது. நின்னுட்டுப் போவோமானு கேட்டேன்.''

''பெரிசா வந்துட்டா வீட்டுக்குப் போக முடியாது கணேசன். எப்ப நிக்கும்னு சொல்ல முடியாது. போயிடுவோம்.''

வீட்டுக்குப் போவதற்குள் அநேகமாய் நனைந்திருந்தார்கள். ராஜி கொடுத்த டவலில் கணேசன் துவட்டிக் கொண்டான். கேட்டு வாங்கி காப்பி குடித்தான்.

''சரசு ப்ரிஜ் இருந்தா நல்லாருக்கும்னு ஃபீல் பண்ணினா, வாங்கிட்டோம். ரொம்ப யூஸ்புல்லாருக்கு விஸ்வம். மன்னிக்கும் ஒண்ணு வாங்கிக் கொடுத்துடு. சண்டே ஒரு நாள்தான் சமையல்லாம்..... மொத்தமா வச்சிடுறது.''

''நல்லாருக்குமா?'' ராஜி சமையலறையிலிருந்து எட்டிக் கொண்டு கேட்டாள். கண்ணில் ஆசை.

''ம். ஜோராகயிருக்கும். அன்னன்னைக்கு என்னென்ன வேணுமோ அதை எடுத்து 'ஹீட்' பண்ணிப்பா.''

ஒன்றுமே பேசாமல் ராஜி மறுபடி உள்ளே போனாள். ஆசை எனக்கும் ஆசை தான். ஒரு நல்ல ஸவுண்ட் சிஸ்டம். பழைய கஜலா பாட்டு கேட்டுக் கொண்டு....: எவ்வளவு நாளாயிற்று? முன்பு - கல்யாணத்துக்கு முன்பு - கணேசன் வந்தால் சினிமாவுக்குப் போய், பேசிக் கொண்டே டவுனிலிருந்து நடந்து ஜங்ஷனில் ப்ளுஸ்டாரில் சாப்பிட்டு விட்டு நடந்தே ரூமுக்கு வந்த காலம் அது.

''இதான் பாச்சலர் லைப்பா. கல்யாணம் பண்ணிட்டவன் முட்டாள். லீவ் நாள்ல பன்னண்டு மணிக்கு எழுந்துக்க முடியுமா? நீயும் கல்யாணம் பண்ணிக்காத விஸ்வம்'' என்று சொன்ன அவன், சரியாய் மூன்றாம் மாதத்தில், சரசுவைக் கல்யாணம் பண்ணிக் கொண்டான்.

''பெரியவங்க இஷ்டப்பட்டாங்க. சரி, கல்யாணம் பண்ணிப் பார்த்திருவோம்னு யோசிச்சேன். மீட் மை வைப் சரஸ்வதி, சரஸ், இது என் ப்ரெண்ட், விஸ்வநாதன், விஸ்வம்னு கூப்பிடுவோம்.''

ரிஸப்ஷனில் அறிமுகம் செய்து வைத்தான். அதற்குப் பிறகு சந்திப்பில்லை. விஸ்வம் கல்யாணத்துக்கு ஐந்நூறு ரூபாய் அனுப்பியிருந்தான். அவன் பணத்தில் புரள்வதாய் மற்ற சிநேகிதர்கள் பேசிக் கொண்டார்கள்.

உள்ளேயிருந்து சாம்பார் தாளிக்கும் வாசமும் சப்தமும் வந்தன. 'உஷ்ஷ்ஷ்... சே! வாட் இஸ் லைப்? சோகமும், பணக் கஷ்டமும் தவிர, விஸ்வம் அலுத்துக் கொள்ள,

கணேசன் குழந்தையோடு கொஞ்சினான். அதோடு ரயில் விளையாட்டு விளையாடினான். எதிலும் மனசு லயிக்கவில்லை. இன்னும் எத்தனை ரூபாய் தேவை என்று கணக்குப் போட்டது.

மத்யானம் ராஜி இலை போட்ட போது ஜாடையாய் ஏதோ பார்த்தாள். புரிந்தது. ''இன்னும் எத்தனை நாள் இருப்பார் இந்த கணேசன்?''

இரண்டாம் நாள் காலையில் கணேசன் கிளம்பினான். 'கூட கொஞ்ச நாள் இருந்துட்டுப் போலாமே' என்று ராஜி மனசில் பயத்துடன் சொன்னாள். கணேசன் நன்றி சொன்னான். கிளம்பும் போது கண்ணில் பளபளப்போடு கை கூப்பினான்.

ஸ்டேஷன் வரை விஸ்வம் கூடப் போனான். வழியில் நாராயணன் மறித்தார்.



"அந்த வூட்டுல எதுக்காக உன்னை வேலையை விட்டு நிறுத்திட்டாங்க?"

"பக்கத்து விட்டில இவ்வளவு ரகளை நடந்திருக்கு, ஒண்ணுமே சொல்லலையேன்னு கோவிச்சுக்கிட்டு நிறுத்திட்டாங்க."

- உலகு



"சார்! எனக்கு ஏதாவது வேலை வாங்கிக் கொடுங்க...!"

"நாசமாய்ப் போச்சு...! நானே வேலை கிடைக்காமல்தானே அரசியலுக்கு வந்திருக்கேன்...!"




"இந்தக் கூட்டம் சிறப்புற நடைபெற நிதி வழங்கிய உதயா ஒயின்ஸ் உலகநாதன் அவர்களுக்கும் ராஜராத்தி ஒயின்ஸ் ராமசாமி அவர்களுக்கும் நன்றி! நன்றி!"

- உ. ராஜாஜி

"ஒண்ணாந்தேதி கொடுத்திடு விஸ்வம். அவசரம். பொண்ணுக்கு வளை காப்பு. கட்டாயம் வேணும். பத்து வட்டி. மறந்துறாதே."

கேட்காத மாதிரி கணேசன் நின்று கொண்டிருந்தான். மனசு குறுகுறுத்தது.

"ஒரு அவசரத்துக்கு வாங்கினேன்."

"ம்."

"குழந்தைக்குச் சுகமில்லை. அதான் வாங்கினேன்."

பேசாமல் நடந்தான். விஸ்வம் மனசில் அவமானம் கனல்விட்டு எரிந்தது.

"அலுத்துடுத்து கணேசன். எங்கயாச்சும் விட்டுட்டுப் போயிறலாமானு தோணுது. 'என் சுக்கத்துக் குடை போல கிழிந்த வாழ்க்கை'னு கவிதை மாதிரி ஆயிடுச்சு லைப். நீ முன்பு சொன்னியே - கல்யாணம் பண்ணிக்காத விஸ்வம்னு. அது கரெக்ட். நான் தப்புப் பண்ணிட்டேன்."

"எங்க போகப் போறே?"

"தெரியலை. உங்கூட வந்துறட்டா?"

"அப்ப மன்னி, குழந்தை...."

"....."

"மன்னிக்கும் இதே கஷ்டம் தானே விஸ்வம். அவ இப்படி இடுப்பெப்புனு வந்த விருந்தாளியோட போயிட்டா?"

விஸ்வம் கறுத்துக் கிடந்த வானத்தை வெறித்தான். ஸ்டேஷன் ப்ளாட்பாரத்துக்குள் ஒதுங்கி நின்றார்கள். மழை வரலாம். பெரிதாகச் சாரல் அடித்தது.

"மழை பெரிசா வந்துட்டா போ முடியாது விஸ்வம். கிளம்பு."

"மன்னிச்சிக்கோ. என்னவோ உளறிட்டேன்."

"தோணும் விஸ்வம். அத்துட்டுப் போயிறலாமானு தோணும். இப்ப நான் வரலையா? உனக்குப் பணக் கஷ்டம் எனக்கும் அதான். உனக்கு இல்லை. எனக்கு இருக்கு. சலிச்சிடுச்சு. அத்துட்டு வரணும்னு தோணிச்சு. வந்துட்டேன். சரசுவ விட்டுட்டு. ஆனா முழுசா அறலை. மன்னி சாம்பார். சாப்பிடுறப்போ சரசு என்ன சாப்பிட்டாளு மனசு அடிச்சிக்குது..... விட முடியாது விஸ்வம். துரத்தி அடிக்கும். எங்கிப் போயிடும். நல்லாப் பார்த்துக்கிட்டே. வரட்டா?"

கையில் நூறுரூபாயைத் திணித்தான். விஸ்வம் மறுத்து அவன் கையிலேயே திரும்ப அழுத்தினான்.

"வேணாம்டா."

ரயில் கிளம்பிற்று. விஸ்வம் வெளியே வந்து பாக்கெட்டைத் தொட்டுப் பார்த்தான். ஐந்து ரூபாய் சில்லறையாய் இருந்தது. ஸ்டேஷன் ஓரத்தில் பாலிதின் கவரைத் தலையிலும் கூடையிலும் மாட்டிக் கொண்டு பூ விற்றப் பெண்ணிடம் ஒரு ரூபாய்க்குப் பூ வாங்கிக் கொண்டு வேகமாக நடந்தான்.

# ஆடி மாதக் கல்யாணங்கள்!

மனிதர்களுக்குத்தான் ஆடி மாதம் ஆகாது என்று சொல்லப்படுகிறது. உலகத்தையே காத்தருளும் தெய்வங்களுக்கு மிகவும் உகந்த மாதமாய் இந்த ஆடி மாதமே விளங்குகிறது. பல சிவாலயங்களில் இந்த மாதம் திருக்கல்யாண வைபவங்கள் ஜாம் ஜாம் என்று நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன.

ஆடிப் பூர உற்சவங்களில் அம்மன் தவமியற்றித் திருக்கல்யாணம் நடைபெறும் கோவில்களும், பத்து நாள் உற்சவம் நிறைவுற்று மறுநாள் திருக்கல்யாணம் நிகழும் கோவில்களும் உண்டு.



• கால பைரவர்

இந்தத் தெய்வீக மணங்கமழும் ஆடி மாதத்தில் அப்படியொரு திருக்கல்யாண வைபவம் வெகு விமரிசையாக நடைபெறுகிற சிவாலயங்களுள் ஒன்றான விருத்தாசலம் பழமலைநாதர் திருக்கோவிலுக்கே சென்று வரலாமே.

தென்னாற்காடு மாவட்டத்தில் உள்ள இந்தக் கோவில், பெயருக்கேற்ப மலை மீது அமைந்தது இல்லை! சமதளத்திலேயே மிகவும் பெரியதான பரப்பளவில் நான்கு புறமும் ஏழு நிலைக் கோபுரங்களுடன் அமைந்துள்ளது. செங்கற் கோவில் கட்டுமானங்களையெல்லாம் அற்புதமான சிற்ப வேலைப்பாடுகளோடு கூடிய கற்றளிகளாய் எடுப்பித்தவர் ஒரு பெண் என்பது பெருமைக்குரிய செய்தி. அந்த மாதரசி தான் சிவபக்த கண்டராதித்த சோழரின் துணைவியான செம்பியன் மாதேவியார்.

இவர் திருப்பணி செய்த திருக்கோவில்கள் இந்த விருத்தாசலப் பழமலை நாதர் ஆலயம் உட்படப் பத்து என்கிறார்கள். 'பொன்னியின் செல்வ'னில் மனம் பறி கொடுத்த வாசகர்களுக்கு அந்தத் தெய்வீக மூதாட்டியின் திருவுருவம் மனக் கண்களில் கம்பீரமாய் நிழலாடும். அந்தப் பொற்கால நினைவுகளுடனேயே நாமும் இந்தத் திருக்கோவிலை வலம்வரத் தொடங்கலாம்.

நான்கு கோபுரங்களிலும் பக்கத் தூண்களில் அற்புதமான சிற்ப வேலைப்பாடுகள் - கிட்டத்தட்ட ஒரே அமைப்பின் நகல்களாய்க் கண்களையும் கருத்தையும் கவரும். பன்னிரண்டு தூண்களில் ஆறு சிற்பங்கள் வீதம் எழுபத்திரண்டு நடன அபிநயத் தோற்றங்களை உருவாக்கியிருக்கிறார்கள். நான்கு வாசல்களில் மேற்குப்புற நுழைவாயில் அடைக்கப்பட்டுப் பயன்படுத்தாமல் விடப்பட்டிருக்கிறது. கிழக்குப்புற வாயில் மணிமுத்தா நதியை நோக்கி அமைந்திருக்கிறது.

விருத்தாசலம் மிகப் பழமையான ஸ்தலம். 'விருத்தகாசி' என்று காசிநகருக்கு இணையான தெய்வீகப் பெருமை வாய்ந்

டதாகச் சொல்லப்படுகிறது. இன்னும் ஒருபடி மேலே போய், 'காசிக்கு வீசம் பெரிசு' என்கிற சொல் வழக்கே ஏற்பட்டிருக்கிறது. (வீசம் என்கிறது பதினாறில் ஒன்று.)

இந்த மணிமுத்தா நதி ஒரு காலத்தில் கரைபுரண்டு ஓடியதுண்டு. இப்போது வெறும் மணல் ஆறுதான். இறந்தவர்களின் அஸ்தியை மணிமுத்தா நதியில் இடுவது கங்கையில் இடுவதை யொத்த புண்ணியம் என்கிறார்கள். பிகப் பழங்காலத்தில் காசிக்குக் கொண்டு செல்வதற்காக ஒருவர் ஆற்றுப் படுகையில் வைத்துச் சென்ற அஸ்தி கலசத்தில் மறுநாள் காலை போய்ப் பார்த்த போது புஷ்பங்கள் நிறைந்து 'காண'

லிங்கோத்பவர்

பட்டதால் இந்தப் பெருமை வந்தது என்று சொல்கிறார்கள்.

காசி நகரில் இருந்த சடுபாடுடைய நகரத்தார் சமூகத்தினர் மணிமுத்தா நதிக்குக் கருங்கல் படித் துறைகள் அமைத்து, ஆலயத்துள் ஆகமக் கோவிலைப் பிரித்துத் தனியே கட்டி, அறுபத்து மூவர் மேடை அமைத்து, விமானங்களின் பொற்கலசங்களைப் புதுப்பித்து நிறையத் திருப்பணிகளைச் செய்திருக்கிறார்கள்.

ஆலயத்தின் உள்ளே - காசியின் புனிதத்தை நினைவுபடுத்துகிற வகையில் காலபைரவர், காசி விசுவநாதர், காசி விசாலாட்சி, பிந்துமாதவப் பெருமாள் சந்நிதிகள் எல்லாம் உண்டு. விருத்தாசலத்தில் காலபைரவர் பிரசித்தி. மற்ற இடங்களில் நான்கு கரங்களோடு கூடிய பைரவர் இங்கே பத்துக் கரங்களோடு அற்புதமான சிற்ப வேலைப்பாட்டில் அருள்பாலித்து வருகிறார்.

இந்த பைரவர் மூர்த்தங்களைப் பற்றியும் ஒரு சுவையான தகவல். மனிதர்களின் பரஸ்பர நம்பிக்கைகளுக்குப் பொருளிருந்த காலங்களில், கோவில்களில் அர்த்தஜாம பூஜைகள் எல்லாம் முடிந்த பின்னர் எல்லாத் திறவுகோல்களையும் பைரவரிடம் 'ஒப்படைத்து' விட்டுக் கோவிலை அவர் பொறுப்பில் தந்து விட்டுப் போய் விடுவார்களாம். மறுநாள் காலையில் 'க்ஷேத்ர பாலர்' பூஜை செய்தே திறவுகோல்களை மறுபடியும் எடுப்பார்களாம். பைரவரின் பெயர் 'க்ஷேத்ர பாலர்' என்பது.

பெரிய நாயகி உடனுறை பழமலைநாதர் (உற்சவம்)

மகிஷாசுர மர்த்தனியாக துர்க்கை

தேவாரம் பாடிய மூவராலும், குமார தேவர், அருணகிரியார், குருநமச்சிவாயர், சிவப்பிரகாச முனிவர், இராமலிங்க வள்ளலார், சொக்கலிங்க அடிகள் முதலானோராலும் பாடப்பட்ட தலம். சுந்தரர் இங்கு இறைவனை வேண்டிப் பொன் பெற்று, மணிமுத்தா நதியில் இட்டு, திருவாரூர்க் கமலாலயத்தில் எடுத்துக் கொண்டது போன்ற பக்தி வரலாறுகள் நிறைய உண்டு.

**ப**தினெட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் முகம்மதியர்களும் பிரெஞ்சுக்காரர்களும் விசாலமான இந்த ஆலய வளாகத்தை அரண், அகழி அமைத்துப் பாதுகாப்புள்ள கோட்டையாகப் பயன்படுத்தியிருக்கிறார்கள். விளைவு, அற்புதமான சிற்ப வேலைப்பாடுகள் நிறைந்த யாகசாலை மண்டபத்தின் முக்கால் பாகம் இருந்த இடம் தெரியாமல் போய் விட்டது! இன்னும் ஒரு பஞ்சவர்ணப் பிராகாரமும் அழிந்து விட்டது. கால் பகுதியே எஞ்சியுள்ள யாகசாலை மண்டபத்தைத் தேர் வடிவில் இருபுறமும் அழகான வேலைப்பாடமைந்த சக்கரங்களோடு, குதிரைகள் இழுக்கும் அமைப்பில் உருவாக்கியிருக்கிறார்கள். குதிரை மேலுள்ள வீரன் உடைந்து காணாது போய் விட்டான். இருந்தபோதிலும், பிரதானமான வழிபாட்டுப் பகுதிக்குள் உள்ள சிற்பங்கள் அனைத்தும் புதுமை மாறாமல் இருப்பது பெருமைக்குரிய விஷயம். பழமலை நாதர் தம்மையும் தம் பரிவாரங்களையும் எப்படியோ காப்பாற்றிக் கொண்டிருக்கிறார்.

கோவில் கோட்டையாக விளங்கிய நினைவு இன்றும் பசுமையாக இருக்கும் வகையில் கோவிலை அணிசெய்யும் வீதிகள் தெ ன் கோ ட் டை வீதி, வடக்குக் கோட்டை வீதி என்றே இன்றும் வழங்கப்படுகின்றன.

கி. பி. 1760ல் இந்தக் 'கோட்டை' ஆங்கிலேயர் வசமானது. 1803இல் கார்ரோ என்னும் ஆங்கிலேய கலெக்டர் அகழியைத் தூர்த்து, 'கோட்டை'யை மீண்டும் கோவிலாக்கிப் புண்ணியம் கட்டிக் கொண்டிருக்கிறார்.

ஸ்தல விருட்சமாக இங்கே வன்னி மரம். 'எங்கே என் வயதைச் சரியாகச் சொல்லுங்கள்!' என்று சவால் விட்டுக் கொண்டிருக்கும் ஒரு பழம் பெருமை இது. சுவாமி சந்நிதியை ஒட்டி வலப்புற மூலையில் பின்புறமாய் பாலாம்பிகை என்னும் இளமை நாயகியார். இவர் மிகவும் பிற்காலத்தில் இடம்பெற்றிருக்கிறார். விருத்தாம்பிகையே குருநமச்சிவாயர் என்னும் ஞானிக்கு இளமை நாயகியாக வந்து சோறு ஊட்டியதாய் வரலாறு. உற்சவ மூர்த்தியான பழமலைநாதர் - பெரிய நாயகியைத் தரிசித்து விடலாம். இவர்தான் இங்கு வி.வி.ஐ.பி. இவர் ஆண்டுக்கு ஒரு முறை மாசிமகத் திருவிழாவின் போதுதான் வெளியே வருவார். மற்ற உற்சவங்களுக்குச் 'சின்ன நாயகர்' என்கிற தம் உதவியாளரையே அனுப்புகிறார்!

வன்னிமரத் திருச்சுற்றில் அற்புதமான அ ழ கு ட ன் வல்லப கணபதி. வள்ளி தேவயானையோடு மு ரு க ன், அண்ணாமலையார் சந்நிதிகளையும் கொடி மரங்களையும் கண்டானந்திக்கலாம்.

**இ**க் கோவிலை ஒட்டியே தனிக் கோவிலாக விருத்தாம்பிகை அருள்பாலிக்கிறார். மற்ற இடங்களில் காண முடியாத சில சிறப்புக்கள் இந்தப் பெரிய நாயகியின் கோவிலில் உண்டு. கர்ப்பக் கிருகத்தைச் சுற்றிய கோஷ்டங்களில் இச்சா சக்தி, ஞான சக்தி, க்ரியா சக்தி வடிவங்களோடு முற்றிலும் புதுமையானதாய் - நரஸிம்மி என்னும் சக்தி வடிவை இங்குதான் காண முடியும். பெண்கள் பெரும் அளவில் வழிபடும் 'துர்க்கை' இங்கே சிறப்பான கலைப் படைப்பும் கூட. உண்மையில் இது மகிஷாசுரமர்த்தனிதான்! எட்டுக் கரங்களோடு, அசுரனை ஒரு காலால் உதைத்தபடி சூலாயுதத்தை ஓங்கும் அவசரம் இருந்தாலும் முகத்தில் அருள் சுரக்கும் புன்னகையோடு கூடிய வடிவம் இது.

**கா**லங்களில் வலுவும், பக்தியோடு கூடிய கலையார்வமும் உடையவர்களுக்கு, அங்குலம் அங்குலமாய்க் கண்டு ஆனந்திக்க இந்தச் சிவாலயத்தில் எத்தனையோ உள்ளன. கோவிலைச் சுற்றிய வீதிகளையும் சேர்த்துப் பஞ்சப் பிராகாரங்கள் என்கிறார்கள். ஆனால் நாலுதான் கணக்கில் வரும். ஒன்று 'ஆத்ம பிரதக்ஷிணமாக இருக்கலாம். ஒருமுறை இந்தக் கோவிலை வலம் வருவது என்று வைத்துக் கொண்டாலே நோய் நொடி எல்லாம் - கொலஸ்ட்ரால் சமாசாரங்கள் உட்பட - காணாமல் போய் விடும்!

- சுப்ரபாலன்

படங்கள் : பூபதி ஸ்டுடியோ

ரெமோரா என்னும் கடல் மீன் நீந்தாமலே 'ஓசி'யில் பயணம் செய்யும் சோம்பேறி. வேகமாகச் செல்லும் சுறாமீன் அல்லது கடல் ஆமையின் மேல் ஆரோகணித்தபடி வெகு தூரம் செல்லும். நிறைய இரை இருக்கும் இடத்தைக் கண்டதும் கீழே குதித்து விடும்.

- அ. ஷண்முகசுந்தரம்



# சிவகாமியின் சபதம்

## பத்தொன்பதாம் அத்தியாயம்

## அன்னையின் ஆசி

மறுநாள் பாண்டியன் நெடுமாறன் புவனமகாதேவியிடம் விடைபெற்றுக் கொள்வதற்காக அந்த மூதாட்டியின் அரண்மனைக்குச் சென்றான்.

மகேந்திர பல்லவரின் பட்ட மகிஷி அக மகிழ்ந்து முகமலர்ந்து நெடுமாறனை வரவேற்றாள்.

அச்சமயம் அங்கிருந்த மங்கையர்க்கரசி வெளியேற யத்தனித்த போது, ''குழந்தாய்! ஏன் போகிறாய்? பாண்டிய குமாரனுடன் நான் பேசக் கூடிய இரகசியம் ஒன்றும் இல்லை'' எனக் கூறி அவளைப் போகாமல் நிறுத்தினாள்.

பிறகு நெடுமாறனை உட்காரச் சொல்லி, ''அப்பனே! எல்லா விவரமும் அறிந்து கொண்டேன். வானமாதேவி நேற்றிரவே வந்து கூறினாள். இருந்தாலும் அந்த உத்தமியின் மனத்தை நீ ரொம்பவும் கலக்கி விட்டாய்!'' என்றாள். நெடுமாறனுடைய மௌனத்தைக் கண்டு, ''நீ காஞ்சிக்கு வந்தது முக்கியமாக எனக்குத்தான் பெரிய அனுகூலமாகப் போயிற்று. இந்தப் பெண்ணைத் தகுந்த வரனுக்கு மணம் செய்து கொடுப்பதாக இவளுடைய தந்தைக்கு நான் வாக்குக் கொடுத்திருந்தேன். அது விஷயத்தில் நான் பிரயத்தனம் செய்ய இடமில்லாமல் நீங்களே முடிவு செய்து கொண்டு விட்டீர்கள். எனக்கு அது விஷயமான பொறுப்பு இல்லாமல் போயிற்று'' என்றாள் புவனமகாதேவி.

''தாயே! அப்படிச் சொல்ல வேண்டாம். தங்களுடைய கவிகாரப் பெண்ணின் கலியாண விஷயமாகத் தங்களுடைய பொறுப்பு தீரவில்லை. தாங்கள் பிரயத்தனம் செய்வதற்கு இடம் இருக்கிறது. கொஞ்சம் மங்கையர்க்கரசியைக் கேட்டு விடுங்கள், அவள் என்னை மணந்து கொண்டு தங்களுடைய பொறுப்பைத் தீர்த்து வைக்கப் போகிறாளா என்று!''

இவ்விதம் நெடுமாறன் சொன்னதும், புவனமகாதேவி,

''அவளைப் புதிதாய்க் கேட்பானேன்? ஏற்கெனவே எல்லாம் அவள் என்னிடம் சொல்லியாயிற்று'' என்று கூறிக் கொண்டே திரும்பிப் பார்த்தாள்.

திரும்பிப் பார்த்த தேவி, மங்கையர்க்கரசியின் கண்களில் கண்ணீர் ததும்பி நிற்பதைக் கண்டு திடுக்கிட்டு, ''இது என்ன? குழந்தைகள் அதற்குள்ளே ஏதேனும் சண்டை போட்டுக் கொண்டீர்களா?'' என்று நெடுமாறனைப் பார்த்து வினவினாள்.

''சாதாரணச் சண்டை போடவில்லை, அம்மா! பெரிய யுத்தம்! வாதாபி யுத்தத்துக்கு நான் போகவில்லையே என்று இங்கே அரண்மனைக்குள்ளேயே யுத்தம் ஆரம்பித்தாயிற்று. இவ்வளவு தூரம்

அமரர் கல்கி



என்னைப் பைத்தியம் பிடிக்க அடித்து விட்டு, என் சொந்தத் தமக்கையே எனக்கு விஷங்கொடுத்துக் கொல்ல நினைக்கும் வரையில் கொண்டு வந்து விட்டு, இப் போது என்னை மணந்து கொள்ள மாட்டேனென்று சொல்லுகிறாள்! இதன் நியாயத்தை நீங்களே கேளுங்கள்!'' என் றான் நெடுமாறன்.

புவனமகாதேவி மங்கையர்க்கரசியைப் பார்த்தாள். ''ஏதோ அனாவசியமான தடையை இவர்களே ஏற்படுத்திக் கொண் டார்கள் என்று தெரிந்து கொண்டாள். குழந் தாய்! பாண்டிய குமாரன் சொல்வது வாஸ் தவமா? உன்னைத் தேடி வந்திருக்கும் மகத் தான பாக்கியத்தை நீயே வேண்டாமென்று மறுதலிக்கிறாயா?'' என்று கேட்டாள்.

மங்கையர்க்கரசி விம்மிக் கொண்டே வந்து அவள் பாதத்தில் நமஸ்கரித்து, ''அம்மா! இவருக்கு நான் என் உள்ளத்தைப் பறிகொடுத்து இவரை என் பதியாக வரித்த போது இவர் சமணர் என்பது எனக்குத் தெரியாது...'' என்று சொல்லி மேலே பேச முடியாமல் தேம்பினாள்.

நெடுமாறன் பெருங் கவலைக்குள் ளானான். ''இது என்ன? இனிறு வெட்டப் பூதம் புறப்பட்டதே?'' என்று அவன் திகைத்து நிற்கையில், புவனமகாதேவி அவனைப் பார்த்து, ''அப்பனே! இந்தக் குழந்தை சைவர் குலத்தில் பிறந்தவள். - சிவபெருமானையும் பார்வதியையும் வழி படுகிறவள் என்று உனக்குத் தெரியுமல் லவா? அதற்கு ஒன்றும் தடைசெய்ய மாட் டாயே?'' என்று கேட்டாள்.

நெடுமாறன் அந்தச் சங்கடமான நிலையிலிருந்து விடுபட வழிகிடைத்தது என்ற உற்சாகத்துடன், ''அம்மா! அப்படிப்பட்ட மூர்க்கன் அல்லன் நான். சமண சமயத்தில் நான் பற்றுக் கொண்டவனானாலும் சைவத்தை வெறுப்பவன் அல்லன். என் ஆருயிர் நண்பனான குலச்சிறை அபாரமான சிவபக்தன். நான் சுரமாய்க் கிடந்த போது இங்கே வந்து திருநாவுக்கரசர் பெருமானிடம் திருநீறு வாங்கி வந்து எனக்கு இட்டான். அதை நான் ஆட்சேபிக்கவில்லை. மதுரையில் இருக்கும் போது அவன் காலை, மத்தியானம், மாலை மூன்று வேளையும் ஆலயத்துக்குச் சென்று மீனாக்ஷி அம்மனையும் சுந்தரேசுவரரையும் தரிசித்து விட்டு வருவான். அம்மாதிரியே இவளும் செய்யட்டும். நான் தடைசொல்லவில்லை!'' என்றான். அப்போதுதான் மங்கையர்க்கரசியின் முகம் முன்போல் பிரகாசமடைந்தது.

அந்த அபூர்வமான காதலர் இருவரையும் புவனமகாதேவி தன் எதிரில் தம்பதிகளைப் போல் நிற்கச் செய்து ஆசி கூறி வாழ்த்தினாள்.

இன்னும் சிறிது நேரம் மேலே நடக்க வேண்டிய காரியங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்து விட்டு, நெடுமாறன் அவ்விருவரிடமும் விடைபெற்றுக் கொண்டு சென்றான்.

அவன் சென்ற பிறகு புவனமகாதேவி மங்கையர்க்கரசியை அன்போடு அணைத்துக் கொண்டு, ''குழந்தாய்! நீ கவலைப் படாதே! நீ சில நாளாக அடிக்கடி கண்டு வரும் கனவைப் பற்றிச் சொன்னாயல்லவா? உன் கனவு நிச்சயம் பலிக்கும். நெடுமாறன் சிவபக்தியில் சிறந்தவனாவான். அந்தப் புண்ணியத்தை நீ கட்டிக் கொள்வாய்!'' என்று ஆசி கூறினாள்.

நெடுமாறனிடமும் மங்கையர்க்கரசியிடமும் இந்தக் கதையைப் பொறுத்த வரையில் நாமும் இப்போது விடை பெற்றுக் கொள்ள வேண்டும். அப்படி விடைபெறுமுன், நெடுமாறன் விஷயத்தில் புவனமகாதேவியின் வாக்கு முழுதும் உண்மையாயிற்று என்பதை மட்டும் குறிப்பிட விரும்புகிறோம். பிற்காலத்தில் நெடுமாறன் ஸ்ரீ சம்பந்தப் பெருமானின் பேரருளினால் சிறந்த சிவநேசச் செல்வனானான். யுத்தம் சம்பந்தமான அவனுடைய கொள்கையும் மாறுதல் அடைய நேர்ந்தது.

இருபத்தைந்து ஆண்டுகளுக்குப் பிறகு, வாதாபிப் புலிகேசியின் மகன் விக்கிரமாதித்தன் தென்னாட்டின் மீது படையெடுத்து வந்து பாண்டிய நாட்டை அடைந்த போது நெல்வேலிப் போர்க் களத்தில் அவனைப் பாண்டியன் நெடுமாறன் முறியடித்துத் தமிழகத்தின் சரித்திரத்தில் அழியாப் புகழ் பெற்றான்.

(தொடரும்)

## அருள்வாக்கு

ஸ்வாமி என்றால் என்ன? 'ஸ்வம்' என்கிற வார்த்தைக்கு 'உடைமை', 'சொத்து' என்று அர்த்தம். 'ஸ்வம்' என்பதே தெலுங்கில் 'ஸொம்மு' என்றாகியிருக்கிறது. 'ஸொம்மு' என்றால் 'சொத்து'. ஸ்வந்தம் - நமக்குச் சொந்தமானது - அதுவே நம் சொத்து. கோயிலைச் சேர்ந்த சொத்தைக் கேரளத்தில் 'தேவஸ்வம்' என்கிறார்கள் அல்லவா? உடைமைக்குச் சொந்தக்காரர் யாரோ - அந்த உடையவர் தான் 'ஸ்வாமி'. ஸ்வாமி என்பதற்கு நேர் தமிழ் வார்த்தை 'உடையார்' என்பது. முன் காலத்தில் கோயில் சுவர்களில் வெட்டப்பட்ட கல்வெட்டுக்களிலெல்லாம் 'திருச்சிற்றம்பலமுடையார்', 'திருவேங்கடமுடையார்', 'திருநாகேச்சரமுடையார்', 'கபாலீச்சரமுடையார்' என்பது போலவே 'உடையார்' என்ற பெயரில்தான் தெய்வங்களைக் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

குருவும் ஸ்வாமியும் ஒன்று என்பதால் தான் வைஷ்ணவர்கள் ஸ்ரீராமாநுஜரை 'உடையவர்' என்றே சொல்கிறார்கள்.

'ஸ்வாமி' என்றால் சொத்துக்கு உரிமைக்காரர் என்றேன். எந்தச் சொத்து? சகலப் பிரபஞ்சமும்தான். அதிலுள்ள நாமும் அவன் சொத்துத்தான். உள்ளதனைத்தும் அவன் ஒருவனுக்கே உடைமையாகும் : 'எல்லாம் உன் உடைமையே' என்று தாயுமானவரும் பாடினார். நம் சொத்து பிறர் சொத்து என்றெல்லாம் பாத்தியதை கொண்டாடுகிறோமே; உண்மையில் இந்தச் சொத்தெல்லாம், அவற்றுக்குப் பாத்தியதை கோரும் நாம், பிறர், எல்லோருமே அவனுடைய சொத்துத்தான். அவன் இல்லாவிட்டால் இந்தப் பிரபஞ்சமும் இல்லை, நாமும் இல்லை. நாம் பாத்தியதை கோருகிற சொத்துக்களும் இல்லை.

எல்லாவற்றையும் செய்கிற ஒரே ஒருத்தருக்குத்தான் அவையெல்லாம் சொந்தம். அதனால்தான் அவர் உடையவர் - ஸ்வாமி - என்று அழைக்கப்படுகிறார். நாமும் அவரது உடைமைகள்தான். நம் சொத்து என்று நாம் நினைத்துக் கொண்டிருப்பதை நம் இஷ்டப்படி விநியோகிக்க உரிமை பெற்றிருக்கிறோம் அல்லவா? அப்படியே ஸ்வாமியின் சொத்தாகிய நாமும் நம்மை அவன் இஷ்டப்படி நடத்தட்டும் என்று விட்டு விட்டால் நமக்கு எந்தப் பாரமும் இல்லை; ஒரே ஆனந்தம்தான்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**



# ஏழை வயிறு

என்.சி.மோகன்தாஸ்



துக்கு நீ சம்மதிச்சுத்தான்யா ஆகணும்!'' - பார்வதி கெஞ்சினாள்.

''அதெல்லாம் முடியாது. சினிமா பைத்தியம் பிடித்து அலையாதே!'' மெய்யன் சாப்பிட்டு ஏப்பம் விட்டபடி கை கழுவினான். வேட்டியை உதறிக் கட்டிக் கொண்டு பாய்விரித்தான்.

''எனக்கு ஆசையாய் இருக்குய்யா. நான் என்ன நகை நட்டு வேணும், பட்டுப் புடைவை வேணும்னா கேட்கிறேன்? நம்ம கரும்புச் சாறு வண்டியைப் படம் பிடிக்கிறேங்கிறாங்க. புடிச்சால் என்ன குறைஞ்சு போகுமாம்!'' என்று அவனுடைய கால்களை அமுக்கி விட்டபடியே பேசினாள்...

''அவங்க கம்மாவா கேட்கிறாங்க...? இருநூறு ரூபா வாடகை! நூறு ரூபா அட்வான்சாவே தந்துட்டாங்க. சரின்னு சொல்லுய்யா. வர வெள்ளிக்கிழமை ஒருநாள் தானே! ஷூட்டிங்கு பார்க்கணும்னு எனக்கும் ரொம்ப நாளாய் ஆசைய்யா. நடிகைகளையெல்லாம் நேரில் பார்க்கலாம்!''

''விவரம் புரியாம பேசாதடி! நம்ம ஏவாரம் போவும். அவ்வைக்குக் கோயில்ல திருவிழா இருக்கு. செமத்தியா ஜூஸ் ஓடும்!''

''ஓடட்டும்ய்யா. யார் வேணான் னாங்க...? ஏவாரம் பாட்டுக்கு ஏவாரம்! அவங்க பாட்டுக்கு ஒரு பக்கம் படம் பிடிக்கட்டும். ஷூட்டிங் பார்க்கறதுக்கு சனங்க கூடும். நமக்கும் ஏவாரம் கூடுமே!''

அவன் யோசனையுடன் படுத்திருந்தான்.

பெண்டாட்டியின் பேச்சை அவனால் தட்ட முடியவில்லை. கர்ப்பமானவள். ஏற்கெனவே இரண்டு முறை உண்டாகி நிலைக்காமல் போயிற்று. இம்முறையாவது குழந்தை பிழைக்க வேண்டும். உருப்படியாய்ப் பிறக்க வேண்டும்.

''என்னய்யா சொல்றே...?''

''சரி, உன் இஷ்டம்!''

**பா**ர்வதிக்குச் சந்தோஷம் பிடிபடவில்லை. வெள்ளிக்கிழமை எப்போது வரும் என்று காத்திருந்தாள். அன்று விடியற்காலையிலேயே எழுந்து ரெடியாகி விட்டாள். கணவனுக்கும் வாடகை துணி வாங்கிப் பளபளவென உடுத்திப் பூரித்துப் போனாள்.

அவர்கள் கிளம்புவதற்கும் வேன் ஒன்று அவசரமாய் வந்து நிற்பதற்கும் சரியாயிருந்தது. ''இன்னுமா ரெடியாகலே...?''

''நாங்க ரெடிங்க.''

''ஏறுங்க வண்டியில.''

இரண்டு பக்கமும் இளநீர் கடை, பாத்திரக் கடை, துணி, சோப்பு, சீப்பு கண்ணாடி! அவற்றைப் பார்க்கப் பார்க்கப் பார்வதிக்கு வியப்பாயிற்று. இத்தனை கடைகளுக்கும் இருநூறு விதம் வாடகை என்றால்... அம்மாடி!

படம் பிடிப்பவர் பெரிய பணக்காரராய்த்தானிருக்க வேண்டும்!

''மளமளன்னு தொழிலைக் கவனிங்க!''

மெய்யன், வண்டியிலிருந்து கரும்பு கட்டுகளை இறக்கிப் பட்டை சீவ ஆரம்பித்தான்.

''என்ன புள்ளே அங்கே வேடிக்கை...?''

''அங்கே பாருய்யா... அந்தம்மா எத்தனை செகப்பு!''

''எல்லாம் மேக்கப்பா இருக்கும். நீ மெஷினை ஸ்டார்ட் பண்ணு!''

கயிற்றைச் சுண்டி இழுக்க, அவனது மனம் ஒரு நிமிடம் பின்னோக்கி ஓட ஆரம்பித்தது.

அவனது ஊர் புதுக்கோட்டை பக்கம். வறட்சியான கிராமம். மழை வருடத்திற்கு வருடம் ஏமாற்றிக் கொண்டேயிருக்க, வயிற்றுப் பிழைப்பிற்கு வேண்டி மெட்ராஸிற்கு ஓடி வந்திருந்தான்.



டையே செருகின போது புரொடக்ஷன் மானேஜர் ஓடி வந்து, ''எல்லாம் தயாரா...?'' என்றார்.

''தயாருங்கய்யா.''

''நீங்க பாட்டுக்கு ஜோலியைக் கவனிங்க. காமிராவைப் பார்க்கக் கூடாது! யதார்த்தமா இருக்கணும்! கம்பெனிக்காரங்களுக்கெல்லாம் ஜூஸ் கொடுங்க. மொத்தமா எவ்ளோ ஆச்சுன்னு சொன்னால் சாயந்திரம் கணக்கைத் தீர்த்து விடறேன். என்ன தெரிஞ்சுதா...?''

''சரிங்கய்யா.''

''ஹீரோவும் ஹீரோயினும் இங்கே வந்து கரும்புச் சாறு குடிக்கிற மாதிரி ஷாட்! அப்புறம் வில்லன் வருவார். அவங்களுக்குள்ளே சண்டை நடக்கும்!''

''நிஜ சண்டைங்களா...?''

''ஏய்... கம்மாகு புள்ளே.''

மானேஜர் அவளை ஒரு மாதிரி பார்த்து விட்டுப் பாக்கை வாயில் கொட்டிக் கொண்டு நடந்தார்.

படப்பிடிப்பு ஆரம்பித்தது. ஒளிப் படிக்கப்பட்டு பாடல் ஒலிக்க, ஹீரோவும் ஹீரோயினும் வாயசைத்துக் கொண்டு தெருவில் ஆடிக் கொண்டே வர வேண்டும். பாடல் ஆரம்பித்து காமிரா ஸ்டார்ட்டாகி, ''ரெடி டேக்'' என டைரக்டர் கத்த, ஹீரோ ஸ்டெப் தவறி விட்டார்.

அடுத்த முறை ஹீரோயின்! அப்புறம் காமிரா கோணம் பிரச்னை. இப்படியே நாலு வரி பாட்டையே நாற்பது நிமிடத்திற்கு நீட்டினர்.

பார்வதிக்குச் சலிப்பாய் வந்தது. வெயிலில் நிற்க முடியவில்லை. தலையைச்

அந்த நாட்களில் மெஷினெல்லாம் இல்லை. கையால்தான் சுற்ற வேண்டும். பெரியவர் ஒருவரிடம் வேலைக்குச் சேர்ந்து வெயிலில் கஷ்டப்படுவான். அவர், கரும்பை மட்டுமில்லை - அவனையும் சேர்த்துப் பிழிந்தெடுக்கவே, வாடகைக்கு மெஷின் எடுத்துத் தனியாய் விற்க ஆரம்பித்தான்.

படிப்படியாய் முன்னேறி, பாங்க் லோனும், பார்வதியின் நகையும் சேர்ந்து இந்த மெஷினைச் சொந்தமாய் வாங்குகிற வரையாயிற்று.

மெய்யன் மெஷினைத் தொட்டு வணங்கி விட்டுக் கரும்பை உருளைக்

கற்றிற்று. காலையில் சாப்பிடாமல் வந்ததில் பசி வயிற்றைக் கிள்ளிற்று. கண்களைச் செருகிக் கொண்டு வந்தது.

நேரம் ஆக ஆகக் கூட்டம் மொய்க்க ஆரம்பித்தது. யார் யார் கம்பெனிகாரர்கள், யார் வெளியாட்கள் எனத் தெரியவில்லை. ஜூஸ் ரெடியாக ஆக, போணியாயிற்று. கரும்பு கரைந்து சக்கையாயிற்று.

ஆனால் பணம் சேரவில்லை. மெய்யன் ஒன்று விடாமல் எல்லாவற்றையும் எழுதி வைக்க ஆரம்பித்தான். அவனுக்கே கை அசந்து போயிற்று. ஷூட்டிங் என்றால் இதுதானா? இப்படியா இழுத்தடிப்பார்கள் என்கிற சலிப்பு வந்தது.

அவளுடைய நிலைமை அவனைக் கவலை கொள்ளச் செய்தது. ''நீ வீட்டுக்குப் போ புள்ளே. போய் ரெஸ்ட் எடு.''

''வேணாய்யா. நானும் போயிட்டா நீ தனியாய் என்ன பண்ணுவே?''

''பரவாயில்லை. நான் சமாளிச்சுக் கிறேன். புள்ளைதாய்ச்சி நீ கஷ்டப்படக் கூடாது. இந்த முறையாவது குழந்தை நிலைக்கணும். ரிக்ஷா புடிச்சு நீ முதல்ல கிளம்பு!''

''என்னய்யா அங்கே பேச்சு... தொழிலைக் கவனி! இங்கே நாலு கிளாஸ் கொடு!''

''எனக்கு ரெண்டு!''

''இங்கே மூணு!''

''இதோ ஆச்சுங்க'' என்று கிளாஸ்களை எடுத்துக் கொண்டு பக்கத்து பைப்படிக்குக் கழுவப் போனவள் அப்படியே சரிந்து விழ - மெய்யன் பதறிப் போனான்.

கரும்புகளைப் போட்டு விட்டு ''பார்வதி...'' என்று ஓடி அணைத்துக் கொண்டான். ''பார்வதி... உனக்கு என்னாச்சு.. சொல்லு புள்ளே!'' என்ன பண்ணுது?''

அவள் இலேசாய்க் கண் திறந்து, ''எனக்கு ஒண்ணுமில்லைய்யா. சும்மா மயக்கம். அவ்வளோதான்! நீ போய்த் தொழிலைக் கவனி!''

''யோவ்! ஜூஸ் தர முடியுமா முடியாதா?''

''கூப்பிடறாங்க போய்யா!''

''உன்னை இந்த நிலைமைல விட்டுட்டு... நான் எப்படி...?''

அதற்குள் புரொடக்ஷன் மானேஜர் ஆவேசத்துடன் ஓடி வந்து, ''ஏய்! இங்கே என்ன பண்றே...? உன்னால அங்கே படப்பிடிப்பு லேட்டாகுது. வா!''

''ஐயா... என் பெண்டாட்டி...''

''அவளைப் பார்த்தால் ஷாட் என்னாகறது! கழுத்தறுக்காம வா! ஹீரோ வெயிட் பண்றார்.''

''ஐயா... உங்க கால்ல விழுந்து கேக்கறேன். அவ பிள்ளைதாய்ச்சிய்யா.''

''ஆமா... பிள்ளைதாய்ச்சி! கைநீட்டி அட்வான்ஸ் வாங்கும் போது அதைப் பத்தி யோசிச்சிருக்கணும்!'' என்று இழுத்துப் போய் மெஷினிடம் நிறுத்தினார்.

அரை மணி நேரம்தான் அவனால் பொறுக்க முடிந்தது. தரையில் விழுந்து கிடக்கும் பார்வதியைப் பார்க்கப் பார்க்க, ஷூட்டிங்காவது கிட்டிங்காவது.. எனக்குப் பெண்டாட்டிதான் முக்கியம் என்று எல்லாவற்றையும் போட்டு விட்டு ஓட ஆரம்பித்தான்.

ரிக்ஷா பிடித்து, குடிசைக்குள் கிடத்தி, முகத்தில் தண்ணீர் தெளித்து அவள் கண் திறக்கவும்தான் மெய்யனுக்குச் சமாதானமாயிற்று.

---

# நெப்போலியன் படித்த BFT

**சினி சிப்ஸ்**

''எத்தனையோ பேர் D.F.T. (Diploma in Film Technology) படித்து விட்டுத் திரைப் படத் துறைக்கு வந்திருக்கிறார்கள். ஆனால், B.F.T. படித்து வந்த பெருமை எனக்கு உள்ளது...!'' - என்கிறார் நெப்போலியன்.

''அது என்ன B.F.T...?''

''B.F.T. ன்னா.. பாரதிராஜா ஃபிலிம் டெக்னாலஜி பாரதிராஜா ஒரு திரைப்படப் பல்கலைக் கழகம். அவரிடம் நடிப்பைப் படித்த நான் அடையும் புகழ் முழுதும் அவரையே சேரும்...!''

கேப்டன் பிரபாகரனில் வில்லனாக அறிமுகமான மன்சூர் அலிகானிடம்... ''நீங்கள் ஒரு சினிமாக் கலைஞனானது பற்றி

''இந்தா புள்ளே! கஞ்சி குடி! தெம்பா இருக்கும்.''

குடித்ததும் அவன் எழுந்து அமர்ந்தான். தலைசுற்றலெல்லாம் இப்போது குறைந்திருந்தது. கண்கள் தெளிவு பெற்றிருந்தன.

''எப்படி புள்ளே இருக்கு...?''

''ப ர வா வி ல் லை ய் யா. வா போவோம்.''

''எங்கே?''

''கரும்பு பிழியத்தான். கைநீட்டிக் காசு வாங்கிட்டோமே!''

''வேணாம். நீ படுத்திரு. நான் போறேன்.''

''சரி கிளம்புய்யா. உனக்குச் சோறு ஆக்கி எடுத்து வரேன்!''

மெய்யன் தன் மனத்தைத் தேற்றிக் கொண்டு கடைவீதிக்கு வர, அங்கே கண்ட காட்சி அவனைத் திகிலடையச் செய்தது.

அப்போது சண்டை காட்சி எடுத்தார்கள் போலும். ஹீரோவின் டூப் தாவி வில்லன் மேல் பாய்ந்தார். ''ஏழைகள் வயிற்றில் அடிக்கும் பாவியே... நீ ஒழிந்து போ!'' என்று சொல்லிச் சொல்லி அடிக்க, காமிரா அவர்களைப் பின்தொடர்ந்தது. கூட்டம் கெக்கலித்தது. ஹீரோயின் விசிலடித்தாள். கூட்டம் கைதட்டிற்று.

அங்கிருந்த பாத்திரக் கடைகளெல்லாம் நகங்கின. காய்கள் கூழாயின. கலர்ப் பவுடர்கள் புகை கிளப்பின. பிளாஸ்டிக் சாமான்கள் தெறித்து விழுந்தன. வில்லன் ஓடிக் கொண்டேயிருந்தான். சைக்கிள் வண்டியைப் பிடித்துத் தள்ளினான். பாட்டில்களை உடைத்தான். அப்படியே ஓடி ஓடி...



என்ன நினைக்கிறீர்கள்...?'' - என்று தெரியாமல் கேட்டு விட்டோம். பொரிய ஆரம்பித்து விட்டார் மன்சூர் :

''க லை ஞ ன ா... நானா... இ ல் ல வே இல்லை... நான் காசுக்கு நடித்துக் கொடுக்கும் ஒரு சாதாரணத் தொழிலாளி. எப்படி கலைஞனாக முடியும்? நினைத்தபடி நடிக்க முடிவ தில்லை. நடித்தாலும் பாதி பேர் பணம் தருவதில்லை. காரணம்... பணம் அவர்களிடமும் இல்லை. இந்தத் துறையால் அரசாங்கத்துக்கு எக்கச்சக்க வருமானம். படமெடுத்துச் சம்பாதித்தால் வீட்டை இடித்தாவது வருமான வரி பிடுங்கி விடுகிறார்கள். ஆனால் தயாரிப்பாளர்கள் காசை இழந்து விட்டால் யாரும் திருப்பித் தர மாட்டார்கள். இப்படிப்பட்டத் துறையில் கலைஞனாவது மிகவும் கஷ்டம் ஐயா...!''

- கலைத்தூதன்

கரும்புச் சாறு மெஷினிடம் வந்தவன் இந்தப் பக்கமும் அந்தப் பக்கமும் நகர, ஹீரோ விடவில்லை.

காமிராவிற்குப் பின்னாலிருந்து டைரக்டர் சைகை காட்ட, வில்லன் சட்டென மெஷினைத் தூக்கித் தள்ளி விட, மெய்யனுக்குப் பக்கென்றாயிற்று. படப்பிடிப்பிற்கு வேண்டி அவர்கள் முன்பே அதன் போல்ட்டு நட்டுகளைக் கழற்றி வைத்திருக்க வேண்டும்.

தள்ளின வேகத்தில் மெஷின் பார்ட் பார்ட்டாய்த் தரையில் சிதறிற்று.

''ஐயா...'' என்று மெய்யன் அலறிக் கொண்டு சீனுக்குள் நுழைய, இரண்டு முரட்டுக் கரங்கள் அவனைப் பிடித்து இழுத்தன.

அதற்குள் மெஷின் அக்கு வேறு ஆணி வேறாகப் போய் விட்டது!

''ஐயா... என்னோட மெஷின்!''

''அட கம்மாயிருய்யா!''

''ஐயோ! வண்டியை உடைக்கிறாங்களே.. கேட்பாரில்லையா?''

''கொஞ்சம் பொறுத்துக்கய்யா. சீன் இப்போ முடிஞ்சுரும்!''

''ஐயோ.. என்னை விடுங்க! அது என் உயிர்! என் தெய்வம்! பாங்க் லோன் போட்டு வாங்கினதுய்யா. உடைக்காதீங்கய்யா. உடைக்காதீங்கய்யா!'' என் வயிற்றுப் பிழைப்பைக் கெடுக்காதீங்கய்யா..''

மெய்யன் ஓடி ஹீரோவிடம் கெஞ்ச, ''கட்... கட்!''

''யார்யா இவனை உள்ளே விட்டது? எவக்கு டயமாச்சு! இழுத்துப் போங்கய்யா.''

ஹீரோ கத்தவும் நான்கு தடியர்கள் அவன் மேல் பாய்ந்து குண்டுகட்டாய்த் தூக்கிப் போயினர். அவன் முரண்டுபிடிக்க - ''ஏய்... என்ன வம்பு பண்ணுகிறாயா... பணம் பத்தாயிரம் வாங்கிட்டு இப்போ தகராறு பண்ணினால் என்ன அர்த்தம்?''

''பணமா... பத்தாயிரமா... என்னங்கய்யா சொல்தீங்க...?''

''ஏய்...! ஒன்னும் தெரியாத மாதிரி நடிக்கிறாயா... புரொடக்ஷன் மானேஜர் உன்னிடம் பத்தாயிரம் தரலை..?''

''இல்லிங்கய்யா.''

''பொய் சொல்றான். ஃப்ராடு! சினிமாகாரன்தானே - கூப்பாடு போட்டுப் பணம் புடுங்கலாம்னு திட்டம் போடறான். விடாதீங்க...'' என்று ஆளுக்காள் அவனை அடித்து துவசம் பண்ண -

ஹீரோ மறுபடியும், ''ஏழைகளோட வயித்துல அடிக்காதே!'' என்று டயலாக் பேசிக் கொண்டு வில்லன் மேல் பாய்ந்து சண்டை போட ஆரம்பித்தார்.

●● ப்ளஸ் டூ படித்த நான் சுயமாகத் தொழில் புரிய எண்ணி, ஸ்கிரீன் பிரிண்டிங் நடத்த முடிவு செய்துள்ளேன். புதிய கருவிகள் வாங்க வசதியில்லை. பயன்படுத்தப்பட்ட பழைய உபகரணங்கள் இருந்தால் பாதி விலைக்கு வாங்கிக் கொள்கிறேன்.

- வி. பார்த்தசாரதி,
J/2, விடுதலை நகர்,
முதலியார்பேட்டை,
பாண்டிச்சேரி - 4.

●● ''வியூ மாஸ்டர்'' ஃபிலிம்கள் இருப்பின் வாங்கத் தயாராக இருக்கிறேன். விலை, எந்தெந்தத் தலைப்புக்களில் எவ்வளவு ஃபிலிம்கள் உள்ளன முதலிய விவரங்களுடன் எழுதவும்.

- கே. கலோசனா,
3, தெற்குக் கரை 2ம் தெரு,
மந்தைவெளிபாக்கம்,
சென்னை - 600 028.



# பாலம்

●● பள்ளி செல்லும் இரு குழந்தைகளை அன்புடனும் பரிவுடனும் பார்த்துக் கொள்ள ஒரு மாது தேவை. ஆதரவற்றவர் எனில் உணவு, உடை, இருப்பிடம் எதிர்காலத் தேவை தரப்படும். ஃபோன் : 2347980

- எஸ். லக்ஷ்மி நாராயணன்,
257, யாதவாள் தெரு,
ஆதம்பாக்கம்,
சென்னை -88.

●● என் தாத்தா, சுமார் நூறு வருடங்களுக்கு முன்பே பல்வேறு நாடுகளின் தபால் தலைகளையும் கவர்களையும் கார்டுகளையும் சேகரித்து வைத்துள்ளார். குறைந்தது ஆயிரத்துக்கு மேல் உள்ளன. இவற்றை விற்பனை செய்ய எண்ணுகிறேன். விருப்பமுள்ளவர்கள் தொடர்பு கொள்க.

- ஜே. தேவதாஸ்,
உடற்கல்வி ஆசிரியர்,
250, வடக்கு மூன்றாவது தெரு,
புதுக்கோட்டை - 622 001.

●● கேளப்பா சரடியாய் வேதஞ்
சொன்னேன்
கெடியாக இவ்வுலகோர் பிழைக்க
வேண்டி
கோளப்பா பரிபாஷை ஒன்றில்லாமற்
கொட்டினேன் ஆயிரத்தைந்
நூற்றினுள்ளே
தாளப்பா அதைக்குறுக்கி எண்ணூறு
சொன்னேன்
தயவாக அதைக் குறுக்கி ஐந்நூறு
சொன்னேன்
மூளப்பா அதைக்குறுக்கி முந்நூறு
சொன்னேன்
முக்கியமாய் நாதாந்தம் நூறு
சொன்னேன்.

- திருவள்ளுவர்வாத சூத்திரம் - 16

திருவள்ளுவரின் மேற்படி நூல்களில் எண்ணூறு என்ற நூல் மட்டும் என்னிடம் இல்லை. இதை வைத்திருப்பவர்கள் அந்நூலை எனக்குக் கொடுத்து உதவினால் என் ஆராய்ச்சிக்கு மிகவும் பயனுள்ளதாய் இருக்கும்.

- அருட். ஞானஜோதி,
சித்தாபண்டிட்,
D56, கோட்டை ரோடு,
நாமக்கல் - 637 001

●● ஏழைகளும் சுலபமாக வாங்கிப் பயன்படுத்தும் வகையில் மலிவு விலை ஷாம்பூ தயாரித்து விற்று வருகிறேன். இதனையே தொழிலாகக் கொண்டு நடத்த முடியும் என்பதால் பிறருக்கும் கற்றுத் தர விரும்புகிறேன். ஆவலுள்ளவர்கள் எழுதவும்.

- திருக்குறள். கு. பாண்டியன்,
121, கடைவீதி,
சலகண்டபுரம் 636 501
சேலம் (மாவ)

●● என் தாயார் படித்து பூஜித்த ராமாயணம் எட்டு பாகங்கள், பாகவதம் ஏழு பாகங்கள், பாரதம் பத்து பாகங்கள், சௌந்தர்ய லஹரி முதலிய பல புத்தகங்கள் இருக்கின்றன. வாங்கி, படித்து, பூஜிக்க விருப்பம் உள்ளவர்கள் தொடர்பு கொள்ளவும்.

- பி. ருக்மணி,
31, ஆபீசர் காலனி,
(பெரிய ஆஸ்பத்திரி எதிரில்)
புத்தூர்,
திருச்சி - 620 017

(பாலம் பகுதி மூலம் இணையும் வாசகர்களின் வெற்றி தோல்விகளுக்குக் கல்கி காரியாலயம் பொறுப்பு ஏற்க இயலாது. எல்லாக் கடிதங்களும் பிரசுரமாகும் என்ற உத்தரவாதம் இல்லை. கட்டணம், கடிதப் போக்குவரத்து கிடையாது.)



* அஜித்

# ஆராய்ச்சி மனப்பான்மைக்கு அஸ்திவாரம் போடுகிறார்!

சென்னை எழும்பூர் டான் பாஸ்கோ பள்ளி. வெளியே ஏராளமான மாணவர்கள் விளையாட்டுக்களில் ஈடுபட்டிருக்க, தலைமை ஆசிரியரின் அறையை அடுத்த வகுப்பில் -

ஒரே ஒலிக் குவியல்!

ஒரு கையில் சிறிய டிரான்ஸிஸ்டர் ரேடியோவும், இன்னொரு கையில் சின்னச் சின்ன ஒயர்கள் இணைந்த டிரான்ஸ்மிட்டர் போர்டுமாக, சுமார் நாற்பது மாணவர்கள் ஹலோ சொல்லுவதும், பாட்டுக்கள் முணுமுணுப்பதும், அவை டிரான்ஸிஸ்டர் ரேடியோ வழியாகப் பல மடங்கு உரத்துக் கேட்பதை ரசிப்பதுமாக இருந்தார்கள்.

ஒரு சிறிய கிண்ணத்தில் பாதிக்கு நிரப்பப்பட்ட தண்ணீருடன், கூடிய இன்னொரு டிரான்ஸ்மிட்டர் போர்டை நம்மிடம் காண்பித்து, ''இது வாட்டர் லெவல் இன்டிகேட்டர்!'' என்றான் ராஜ் - ஒன்பதாம் வகுப்பு மாணவன்.

ஒயரின் ஒரு முனை தண்ணீரைத் தொட, இன்னொரு ஒயர் முனை டிரான்ஸ்மிட்டரில் தொட, கீச் என்று ஒலி எழுந்தது.

''மாடியில் துணி காயப் போட்டு விட்டு, ஹாயாகக் கீழே வந்து ஓய்வு எடுத்துக் கொள்ளுகிறீர்கள். திடீரென்று மழை வந்து விடுகிறது. மழைத்துளி தரையில் பட்டவுடன் 'கிர்'ரென்று சின்ன மணி யோசை எழுப்பி, உங்களையும் எழுப்பி விடும் ரெயின் அலாரம்!'' என்றான் எட்டாம் வகுப்பு மாணவன் ராஜேஷ். இதுவும் வாட்டர் லெவல் இன்டிகேட்டர் தத்துவத்தின் அடிப்படையில் உருவானதுதான். இதே போல் தீப் பிடித்துக் கொண்டால் அறிவிக்கும் 'அலாரம்' தயாரிக்க முடியுமாம்.

எல்லார் கையிலும் இரண்டு பாட்டரி செல்கள்; சின்னஞ்சிறு 'மோல்டு' எனப்படும் டிரான்ஸ்மிட்டர் போர்டு - ஒயர்களும் கண்டென்சர்களும் இணைந்தது.

''ஆம்புலன்சில் விளக்கு அணைந்து அணைந்து எரியுமே, அது போல 'ப்ளிங்கர்' பண்ண ஆரம்பிச்சேன். ஆனா இதைக் கண்டுபிடிச்சேன்!'' என்றான் அஜித்.

இருள் சூழ்ந்தவுடன் சாலை விளக்குகள் தானாக எரிகிற மாதிரி ஒரு சிறு கருவி. வெளிநாடுகளில் இப்படித்தான் அமைத்திருக்கிறார்களாம்.

''ஆம்புலன்ஸ் விளக்கு அணைந்து அணைந்து எரிய என்ன காரணம்? இதில் இருள் சூழ்ந்ததும் விளக்கு எரிய என்ன காரணம்?''

''ஆம்புலன்ஸில் மெமரி கண்டென்சர் இருக்கிறது. அதனால் விட்டு விட்டு எரிகிறது. இதில் கண்டென்சருக்குப் பதிலாக

* ஆர்வ முனைப்புடன் மாணவர்கள் - நாராயணன் வழிகாட்டுகிறார்.



* நாராயணன்



போட்டோசெல் இருக்கிறது!'' என்றான் அஜித்.

வகுப்பறை முழுக்க இந்த 'இளம் விஞ்ஞானி'களின் உற்சாகக் குரல்களுடன், டிரான்சிஸ்டர் வழியாக வரும் ஒலிகளும் சேர்ந்து, அலை அலையாக எழுந்து உச்ச கட்டத்துக்குப் போய் ஓய்கிறது. ஒருவரின் உற்சாகம் இன்னொருவரைத் தொற்றிக் கொள்ளுகிறது.

''டிரான்ஸ்மிட்டரின் ஒரு வயரைத் தொட்டபடி அடுத்து நிற்கும் மாணவனின் கையையோ முகத்தையோ தொட்டால் டிரான்ஸிஸ்டர் மூலமாகக் கீச் கீச் என்று சத்தம் வருகிறதே? எப்படி?''

''நம் உடலில் ஓடுகிற ரத்தத்தில் தண்ணீர் இருக்கிறதல்லவா? ரத்தம் கண்டக்டர் மாதிரி வேலை செய்கிறது. அதனால் தான் மின்சாரம் பட்டவுடன் நம் உடலில் ஷாக் அடிக்கிறது!'' என்றான் விவேக்.

இந்த மாணவர்களைப் பத்து நாட்களுக்குச் சோதனைக் களத்தில் சீரியலாக இறங்க வைத்தவர் -

எஸ். நாராயணன்.

வங்கியில் வேலை பார்த்தாலும், பல வருஷங்களாக இதுபோன்ற விஞ்ஞானக் கண்டுபிடிப்புகளில் உற்சாகம் காட்டி வருபவர்.

''எடிசன் மாதிரி யாராவது வர முடியும் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது. அப்படியே வர முடியாவிட்டாலும், மாணவர்களுக்கு ஆராய்ச்சி மனப்பான்மை யாவது உருவாகிறதே'' என்கிறார் நாராயணன்.

நூற்றுக்கணக்கான இந்திய கிராமங்களுக்கு விஜயம் செய்து, அங்குள்ள கிராம இளைஞர்களுக்குப் பயன்படும் விதத்தில் அவர்களே செய்து பார்க்கும் சின்னஞ்சிறு கருவிகளை உருவாக்க உதவியிருக்கிறாராம். ''சிரமமே இல்லாமல் செய்து விடுகிறார்கள்!'' என்கிறார்.

''அஜித் என் பையன்தான். நான் இல்லாத போது அவனே எலக்ட்ரானிக்ஸ் வகுப்புகள் நடத்துவான். ஹை எனர்ஜி வோல்டேஜ் எனப்படும் மின்னலில் இருந்து மின்சாரம் எடுக்கும் முறை பற்றி இப்போதே யோசித்து வருகிறான் அஜித்!'' என்கிறார் நாராயணன்.

சூரிய வெப்ப சக்தியின் ஆற்றல், கான்ஸர் செல்களின் வளர்ச்சி எனப் பல ஆராய்ச்சிகளில் நாராயணனே ஈடுபட்டுள்ளதால் அவர் மகனுக்கும் விஞ்ஞான ஆராய்ச்சி ஆர்வம் தொற்றிக் கொண்டுள்ளது. அதை மேலும் பல குழந்தைகளிடையே பரவச் செய்ய உடலாலும் பொருளாலும் தொண்டாற்றி வரும் நாராயணன் ஓர் அரிய மனிதர்தான்!

- சாருகேசி



''உங்க பேச்சைக் கேட்டு வாக்கிங் போனதால் எனக்குப் பத்து ரூபாய் நஷ்டம் டாக்டர்!''

''எப்படி?''

''ரொம்ப தூரம் வாக்கிங் போயிட்டேன். திரும்பி நடந்து வர முடியலை. ஆட்டோவில் ஏறும்படியாயிடுச்சு!''

- ஞா. ஞானமுத்து



''நேர்மைக்கே இப்பல்லாம் காலமில்லாம போயிடுச்சு ஸார்!''

''ஏன் அப்படிச் சொல்றீங்க?''

''ஒருத்தன் மாமூல் கொடுத்தப்ப 'நான் வாங்கறதில்லை'ன்னு சொன்னேன்; உடனே, பக்கத்துல இருந்தவன், 'அதிகமா எதிர்பார்க்கிறார் போலிருக்கு'ன்னு சொல்றானே!''

- சீர்காழி வி. ரேவதி




● சிலியில் 36 வயதான அந்தோனி பெர்செலி இறந்து போனார். அவரது உடல் அடக்கத்துக்கு எடுத்துச் செல்லப்பட்டது. இறுதி ஊர்வலம் ஒழுங்காகத்தான் சென்றது - திடீரென்று பெர்செலி உயிரோடு எழுந்து உட்காரும்வரை! ஆனால் சவ அடக்கத்திற்காகச் செய்த ஏற்பாடுகள் வீணாகவில்லை. அவர் திடீரென்று உயிர் பிழைத்து எழுந்தவுடன் அவரது மாமியார் அதிர்ச்சியால் மாரடைத்து காலமானார். அந்தச் சவப் பெட்டியும், மற்ற ஏற்பாடுகளும் அந்த அம்மையாரைச் சொர்க்கத்துக்கு அனுப்ப உபயோகப்படுத்தப்பட்டன.

Amazing Blunders and Bungles என்ற புத்தகத்திலிருந்து.

தகவல் : கிருஷ்ணவேணி ரங்கநாதன்



● எச்சரிக்கைப் பலகைகளைக் காணவில்லை!

# கடலில் குளிக்கச் சென்றான் திரும்பி வரவேயில்லை!

**ஆனந்த்!**

இருபது வயது இளைஞன். துள்ளலும் துடிப்புமாக நீச்சல், மலையேறுதல், கராத்தே, பத்து மைல் சுற்று வட்டாரத்தில் ஆளவரமற்ற வனப் பிரதேசத்தில் தனித்து விடப்பட்டு, முகாமுக்கு வழி கண்டு பிடித்து வருதல் போன்ற முரட்டுத்தனமான இராணுவப் பயிற்சிகளை 'நேஷனல் டிஃபென்ஸ் அகாடமி'யில் படித்துத் தேறியவன்.

இன்னும் ஒரு வாரத்தில் ஆபீஸர் பயிற்சிக்காக டேராடூனுக்குச் செல்லவிருக்கும் வேளையில், விடுமுறைக்காகச் சென்னையிலுள்ள தன் வீட்டிற்கு வந்திருந்தான். நண்பர்களுடன் குதூகலமாகக் கடலில் குளிக்கச் சென்றான். போனவன் போனவன்தான், திரும்பி வரவேயில்லை!

இது நடந்தது கடந்த 87 ஜூலையில். இந்தப் பேரிழப்பைப் பெற்ற தாய் விஜயா பாலகிருஷ்ணன், தமது துக்கம் ஒருபுறம் இருந்தாலும் மறுபுறம் இன்னொரு தாய்க்கு இப்படியோர் இழப்பு வந்து விடக் கூடாது என்று கருதினார்.

தமது மகனைப் பலிகொண்ட பெசன்ட் நகர் கடற்கரைப் பகுதியில் குளிப்பது ஆபத்து என்று எழுதப்பட்ட தகரப் பலகைகளை நட்டு வைத்தார். கடலில் குளிக்கும் போது கையாளப்பட வேண்டிய விதிமுறைகள் பற்றிப் பள்ளி மாணவ - மாணவியரிடையே பேச்சுப் போட்டி வைத்து - அது ஆண்டுதோறும் நடப்பதற்காகச் சுழற் கோப்பை ஒன்றையும் நிறுவினார்.

''ஆயினும் பாருங்கள்... இன்னமும் கடற்குளியல் பற்றிய விழிப்புணர்வு இளைஞர்களிடமும் பெற்றோரிடமும் ஏற்பட்டதாகவே தெரியவில்லை. அப்படி ஏற்பட்டிருந்தால் கடந்த ஐந்தாண்டுகளில் என் மகன் பலியான அதே கடற்கரையில் மேலும் பத்துப் பேர் பலியாகியிருப்பார்களா?'' என்று வருந்துகிறார் விஜயா.

இதில் இன்னொரு வேடிக்கை என்னவென்றால் இவர் வைத்த எச்சரிக்கைப் பலகைகளைக் கூட இப்போது காணோம் என்பதுதான். இருப்பினும் மனம் தளர்ந்து விடவில்லை விஜயா.

பல உயிர்களைப் பலிவாங்கிய அந்தக் கடற்கரைப் பகுதியில், அங்கு பலியானவர்களுக்கு ஒரு நினைவுச் சின்னம் எழுப்புவதன் மூலம் மற்றவர்களை எச்சரிப்பது; இளைஞர்களை ஒன்றுதிரட்டிக் கடற்குளியல் பற்றிய அபாயங்களை விளக்குவதோடு, கடலில் மூழ்கித் தத்தளிக்கும் நிலையிலிருப்பவர்களை எப்படிக் காப்பாற்றுவது போன்ற விஷயங்களைக் கருத்தரங்குகள் மூலம் எடுத்துச் சொல்வது - முடிந்தால் திரைப்படமாகவே எடுத்து எச்சரிப்பது போன்ற பணிகளில் ஈடுபட்டிருக்கிறார் அவர்.



● விஜயா பாலகிருஷ்ணன்



● ஆனந்த்

இவற்றோடு, ''என் மகன் பெயரில் ஒரு டிரஸ்ட் நிறுவி நேஷனல் டிஃபென்ஸ் அகாடமியில் சேர விரும்பும் தகுதியுள்ள ஓர் இளைஞனுக்கு ஆண்டுதோறும் உதவித் தொகை வழங்கவும், சாகசச் செயல்புரிந்து உயிரைக் காப்பாற்றிய ஒருவருக்கு ஆண்டு தோறும் வீர விருது வழங்கவும் முயற்சிகள் செய்து கொண்டிருக்கிறேன்!'' என்கிறார் விஜயா.

நம் நாட்டு இளைஞர்களின் உயிர் மேல் தவிப்பட்ட ஒரு தாய்க்கு இருக்கும் அக்கறையில் ஓர் அணுவளவு கூட நமது இறையாண்மை மிகுந்த அரசுக்கு இல்லை என்பது எத்தனை பெரிய கேவலம்!

– நிர்மலா சக்கரவர்த்தி

# பெரிய தம்பி

## எஸ்.வி. சேகர்

வசனம்: வெங்கட்

சென்ற வாரம் :

பெரிய பண்ணை - கருப்பாயி தம்பதியின் மகன் பெரியதம்பி பட்டிணத்திலிருந்து விடுமுறைக்காகச் சொந்தக் கிராமமான பெரியபட்டிக்கு வருகிறான்.

### காட்சி - 3

*(பெரிய பண்ணை வீடு. கருப்பாயி வாசலில் ஆரத்தி எடுக்கிறாள்)*

**கருப் :** காத்து, கருப்பு, சிவப்பு, பச்ச, மஞ்ச, எதுவும் படாம ராசா நீ நீடுழி வாழணும்டா...!

**பண்ணை :** பெரீதம்பி! மொதல்ல இந்த மணிய அடி!

**பெரிய :** காலிங்பெல்னா சின்னதா வீட்டுக்கு வெளில வப்பாங்க. இவ்ளோ பெரிசா வீட்டுக்குள்ளவா கட்டறது.. சங்கராபரணத்துல சோமயாஜுலு அடிச்ச பெல் மாதிரி!... அடிச்சா கூடவே ஷங்கராஹு பாடணும் போல இருக்கு!

**தாத்தா :** யாரு இந்த மணிய அடிச்சது...?

**பெரிய :** கோவில் மணிய எல்லாம் வீட்ல கட்டாதீங்கன்னா கேக்கறீங்களா பாரு - மணி அடிச்சதும் முருகன் கிழவன் வேஷத்துல சமையல் கட்டுல இருந்து நேர பிரசன்னமாய்ட்டாரு!

**தாத்தா :** நான் முருகன் இல்லடா.. ஒன் தாத்தா.. நல்லா இருக்கியா பேராண்டி?

**பெரிய :** இருக்கேன் தாத்தாண்டி!

**தாத்தா :** ஒன்னைப் பாத்துட்டுத்தான் சாகணும்னு கைல புடிச்சிட்டு இருக்கேன் உசுர!

**பெரிய:** அதான் வந்திட்டேனே... நீ போலாம்!

**பண்ணை :** அதெப்படி போவாரு? ஒனக்கும் - ஒன் அத்தமக திருகாணிக்கும் நடக்க வேண்டியது நடக்கட்டும் அப்புறமா போலாம்!

**பெரிய :** திருகாணியா?

**கருப் :** ஆமாண்டா என் அண்ணன் மக..

**பெரிய :** குட்டையா மூக்க ஒழுக விட்டுக்கிட்டு...

**கருப் :** இப்ப முள்ளங்கி பத்த கணக்கா இருக்கா!

**தாத்தா :** நீ அத சின்ன புள்ளைல பாத்தது. இப்ப பாத்தா அசந்துருவ. ரம்ப.. ஊர்வசி கணக்கா இருக்கு!

**பெரிய :** என்னமோ தேவலோகப் பெண்கள்ளாம் பக்கத்து வீட்ல குடி இருக்கற மாதிரி பேசற! ஆமாம் எங்க அவ...?

**பண்ணை :** டக்குன்னு பாத்துப்புட்டா கவாரவியம் போயிரும். அதனால நவராத்ரி படத்துல சாவித்ரி வந்த கணக்கா வரச் சொல்லி இருக்கேன்.

*(ராசாத்திராசன் வந்தான் ஸ்டைலில் படுதாவை இருவர் பிடித்து மறைத்து வர, திருகாணி வருகிறாள்)*



• இப்படிச் சிரிப்பலைகளைச்.....



''கோவில் மணிய எல்லாம் வீட்ல...''

பெரிய : யோவ்... எவ்ளோ நேரம்யா இந்தப் படுதா? எடுங்கய்யா! (எடுக்க, இருகாணி தலையில் நீண்ட ஜடையுடன் காட்சி தருகிறாள்!)

பண்ணை : எப்டி?

பெரிய : இந்த ரூஞ்சிக்கு இப்படி ஒரு பில்ட்அப்! இந்தப் படுதாவை நிரந்தரமாவே பிடிச்சுக்குங்க!

(இருகாணியின் அப்பா சின்ன பண்ணை வருகிறார்)

சி. பண்ணை : மருமகப் பிள்ளே! வாங்க! வாங்க!.. இருகாணி, மாமனைப் பாக்கோணுதம்னியே பாத்துக்க... நாணி கோணி நிக்கற அளகப் பாருங்க!

பெரிய : ஒடம்பே நாணல்தான். இதுல வேற கோணல்!

பண்ணை ஆள் மாடசாமி : கம்மா சினிமா ஸ்டாரு கணக்கா இருக்குதே தம்பி!

பெரிய : ஸ்டார் இல்ல... ஸ்டார் டீவி.யே! அங்க பார். ஆண்டனா எல்லாம் கூட இருக்கு!

சி. பண்ணை : அதப் பத்திக் கேவலமாப் பேசிப் புடாதீங்க. ஆயிரத்துல ஒருத்திக்குத் தான் இந்த நெறுகல முடி வளரும்!

பெரிய : கோடில ஒருத்திக்குத்தான் இந்த தெனாலயே வளரும்!

பண்ணை : தாலி கட்டப் போற புள்ளய தாறுமாறா பேசாதல! இவ பொறந்ததுமே ஒனக்குத்தான்னு தீர்மானம் பண்ணிட்டம்!



● 'ராசாத்தி ராசன் ஸ்டைலில்...'

பெரிய : அது தெரிஞ்சிருந்தா நான் பொறந்திருக்கவே மாட்டேன்! அப்பா...! என்னை வற்புறுத்தாதீங்க இப்ப நா மேஜர்!

கருப்பாயி : மேஜரா! அடப்பாவி! சொல்லாம கொள்ளாம நீ ராணுவத்துல சேந்திட்டியா?

பெரிய : ஆமாம்... சேரும்போதே மேஜரா சேந்து சிப்பாயா ரிடையர் ஆயிடு

| | | |
|---|---|---|
| பெரிய தம்பி | - | எஸ்.வி. சேகர் |
| பெரிய பண்ணை | - | கந்தா |
| சின்ன பண்ணை | - | சிவசங்கரன் |
| பழமொழி தாத்தா | - | பாலன் |
| மாடசாமி | - | எஸ். வி. பாலு |
| தெருப்புழுதி | - | டி. டி. பாலு |
| எல்லைச்சாமி | - | மணி |
| கிராமத்து ஆட்கள் | - | பிஸ்கட் கணேசன், முரளி, கணபதி, ராகவன். |
| கருப்பாயி | - | சித்ரா |
| இருகாணி | - | வந்தனா |
| வீணா | - | நாகலக்ஷ்மி |
| காட்சியமைப்பு | - | ராமசாமி நாயுடு அண்ட் சன் |
| ஒளி | - | சோமேஷ் |
| ஒப்பனை | - | மோகன் - சேகர் |
| இசை | - | பூவை முரளி, என். எஸ்.குமார். |
| மேடை நிர்வாகம் | - | மச்சி ராமசாமி |
| பொதுத் தொடர்பு | - | ஈ.வெ.ரா. மோகன் |
| வசனம் | - | வெங்கட் |
| கதை, இயக்கம் நாடகமாக்கம் | - | எஸ். வி. சேகர். |

....சிரிக்க வைக்கும் நாடகப்ரியா குழுவினர்...



"இன்னும் பலூனை வச்சு விளையாடறா..."

வேன்! மேஜர்ன்னா பெரியவன்னு அர்த்தம்!

**பண்ணை :** வீட்ல இம்புட்டு பெரிய மேஜருங்க இருக்கோம். பேச்ச தட்டலாமாடா?

**பெரிய :** கல்யாணம் சொந்த விசயம்!

**சி. பண்ணை :** சொந்தத்துலதானே செஞ்சுக்கச் சொல்லுறோம்!

**பெரிய :** ஒங்க பொண்ணுக்காவது மண்டைல வளர்ந்ததுக்கு ஏதோ ஒரு அறிகுறியாவது நீளமா தென்படுது... உங்க மண்ட களிமண்ணு மாமா!

**பண்ணை :** டாய்! இந்தப் பெரிய பண்ணைக்காரனை பிருகமாக்கிடாத! பிருகமாயிடுவேன்!

**பெரிய :** மிஞ்சிப் போனா நாயா மாறுவீங்களா? கயித்த மாட்டி கொல்லைல கட்டிடுவேன்!

**பண்ணை :** வேற வழியில்ல! எனக்கு நானே தண்டனை குடுத்துக்க வேண்டியதுதான்! நீ சரின்னு சொல்ற வரைக்கும்...

*(வெளியேறுகிறார்)*

**பெரிய :** எங்க போறாரு?

**மாடசாமி :** தடுத்து நிறுத்துங்க. பெரிய தம்பி.. அப்பா பிடிவாதக்காரரு. மலைக்கு மேல ஏறி வெய்யில்ல ஒத்தக் கால்ல நாள் கணக்கா நின்னுடுவாரு. ஊர் சனங்க வேடிக்கை பார்க்கக்கூடிடும்... *(பெரிய பண்ணை பின்னால் போகிறான்)*

**பெரிய :** ஓ... கடலோரக் கவிதைல சுந்தர்ராஜ் நிப்பாரே அது மாதிரியா?...

**கருப் :** ஆமாண்டா... ஒன் பரீட்சை முடிவு வர்ற வரைக்கும் இப்படித்தான் இரண்டு நாள் நின்னாரு.

**பெரிய :** அப்புறம் எல்லாரும் போய் ஊஸ்! ஊஸ்! பையன் பாஸ்! பாஸ்னு பாடலீங்களா? நல்லா நிக்கட்டும்! கால் வலிச்சப்புறம் தானே வருவாரு... அதுக்காக இந்தச் சனியனைக் கட்டிக்க முடியாது!

**இருகாணி :** என்ன வார்த்தை சொல்லிப்புட்டீக?

**பெரிய :** சமஸ்கிருத வார்த்தையா சொல்லிட்டேன். எல்லாருக்கும் புரியற மாதிரி தமிழ்லதானே சொன்னேன்!...

**இருகாணி :** பேசறது நீங்கதானா?

**பெரிய :** இல்ல.. வேற ஒருத்தர் எனக்கு டப்பிங் பேசறாங்க!

**இருகாணி:** மரத்துக்கு வேரு - பூவுக்கு நாருன்ற மாதிரி - எனக்கு நீங்கன்னு நினைச்சிருந்தேன்... நெஞ்சுக்குள்ள நீய அள்ளிப் போட்டுப்புட்டீகளே!

**பெரிய :** நீ அணைக்கும் படைய வரச் சொல்றேன். வந்து அணைப்பாங்க!

**இருகாணி :** எடுத்தும் கவுத்தம்னு பேசாதீக. இதப் பாத்தீகளா...

*(பலூனை நீட்டுகிறாள்)*

**பெரிய :** இன்னும் பலூனை வச்சி விளையாடறா...! இவளை எப்படி கல்யாணம் பண்ணிக்கறது?

**இருகாணி :** இந்தச் சின்ன பலூனை ஊதி, பெரிசாக்கினது யாரு? நீங்கதான்! ஆசையா நீங்க ஊதிக் குடுத்த இந்த பலூனைப் பத்து வருசமா பத்ரமா பாதுகாக்கேன். ஏன் மாமா, ஏன்? இதுக்குள்ளாற இருக்கறது என் மாமாவோட மூச்சுக் காத்து!

**கருப் :** பார்ரா! உம்மேல என்ன பாசம் இருந்தா பலூனுக்குள்ள ஒன் மூச்சுக் காத்தைப் பிடிச்சுப் பத்து வருஷம் பாதுகாக்கும்?

**பெரிய :** அவதான் மூளை இல்லாம பேசறான்னா நீயுமா? அந்த பலூனுக்குள்ள என் மூச்சு மட்டுமா இருக்கு. நம் இல்லைன்னு தெருப்புழுதிட்ட குடுத்தேன். அவன் கொஞ்சம் ஊதினான்... குப்பன் கொஞ்சம் ஊதிக்குடுத்தான், கோவில்ல தாத்தா ஒருத்தர் தன் ஒடம்புல இருந்த கொஞ்ச நஞ்ச மூச்சயும் இதுல ஊதிக் குடுத்துட்டு அந்தக் கணமே பூட்டாரு! இப்படிப் பல பேர் மூச்சு இதுல இருக்கு... தெரியுமா?

**தாத்தா (உள்ளே வந்தபடி) :** அருணாக் கயிறு எங்கடா கருணாகரான்னா மரணக் கிணறு விடுடா மகாதேவான்ற கதையா என்ன சத்தம் இங்க?

**பெரிய :** அந்தப் பழமொழியை இன்னொரு வாட்டி சொல்லு! இல்ல சொல்லு...

**தாத்தா :** கடுதாக்கிழங்கு எங்கடா உருளைக்கிழங்குன்னா அவிச்சி தின்னுன் வான் அவினாசிக்காரன்!

**பெரிய :** இது வேற பழமொழி! நீ சொல்ற பழமொழி உனக்கே ஞாபகம் இல்லாத அளவுக்கு 'ரீல்' விடுற...

**மாடசாமி (ஓடி வந்து) :** பெரியதம்பீ... பெரியபண்ணை மல மேல ஒத்தக் கால்ல நிக்கையில சறுக்கி விழுந்து அடிபட்டுக் கிட்டாரு. அதோட காலை மாத்தி நிக்கி றாரு! இருகாணிய கட்டிக்கறேன்னு சொல் லலை...

**பெரிய :** மாடசாமி! இப்டி வா! என் னய்யா இப்டி பண்றான் என் அப்பன்!

**மாடசாமி :** பிடிவாதக்காரரு தம்பீ... பிடிச்ச முயலுக்கு மூணு கால்.

**பெரிய :** இப்படியே நின்னார்னா இவருக்கே ஒரு கால்தான் போல இருக் கேய்யா!

**மாடசாமி :** பேசாம ஒத்துக்குங்க!

**பெரிய (யோசித்தல்) :** முள்ளை முள்ளால எடுக்கிறேன். நாளைக் காலை யில இருகாணி மஞ்சக் கயித்த கட்றா.

**சி. பண்ணை :** மாப்ளை! என்ன சொல் றீங்க? இருகாணி மஞ்சக்கயத்தைக் கட்டு வானா?

**பெரிய :** யார்கட்னா என்னய்யா. உனக்கு வேணுங்கிறது மஞ்சக் கயிறு அவ்வ ளவுதானே. பேசாம போ.

**கருப் :** என் ராசா! என் புருசனுக்குச் சொல்லி அனுப்புங்க! கொக்கு மாதிரி ஒத்தக் கால்ல நின்னு களைச்சு வருவாரு.. கருவாட்டுக் குளம்பு ஆக்கிப் போடணும்!

**சி. பண்ணை :** இது என் மருமகப் புள்ளை! பிரு பண்ணிப்புட்டு சம்மதிக்கப் புட்டீக.. மாப்ளை முறுக்கு இதான்!

**பெரிய :** மாப்பிள்ளை முறுக்கா? இரு.. மாப்ளை சீடை மாப்ளை தேன்குழல் எல் லாம் என்னன்னு நாளைக்குக் காட்டறேன்!

(தொடரும்)

புகைப்படங்கள் : யோகா

## சபாஷ் சுபா!

◆ சுபாவின் 'நிலா மயக்கம்' கதை, இவ்வளவு விரைவாக முடிந்து விட்டதே என்ற ஆதங் கம்! முடிவு எதிர்பார்த்தபடியே மனத்தைத் தொடுவதாக இருந்தது. சபாஷ் சுபா!
தோட்டக்குறிச்சி, இரா.வளையாபதி.

◆ திருமண வரவேற்பில் ஆரம் பித்த கதை, மீண்டும் திருமண வரவேற்பிலேயே சுபமாக முடிந்த விதம் - சிம்ப்ளி சூப்பர்ப்! 'நிலா மயக்கத்தில்' இடம்பெற்ற நந்தினி, அருண்குமார் மறக்க முடியாத கதாபாத்திரங்கள். ஓவியர் கரோ... அவர்களின் ஓவியமும் ஒரு ப்ளஸ் பாயிண்ட்!
தர்மபுரி - 2, வித்யா.

◆ நிலா மயக்கம் எழுதப்பட்டி ருந்த விதம் என்னை மிகவும் கவர்ந்தது. திரைப்படக் காட்சி களை நேர்த்தியாக எடிட் செய்து தொகுப்பது போல் கதை சம் பவங்கள் அமைக்கப்பட்டிருந் தன. கரோவின் படங்கள் ஆரம் பம் முதல் கடைசி வரை சிரத் தையுடன் போடப்பட்டிருந்தன.
சென்னை - 41, பூபாலி.

◆ மிக இயல்பான உரையாடல் கள், சம்பவங்கள் கொண்டு கதையை வளர்த்த சுபா, கடைசி அத்தியாயத்தில் தலைப்பை நியா யப்படுத்த ஒரு சினிமாத்தனமான டயலாக்கைப் புகுத்தியது திருஷ்டி!
மயிலாடுதுறை, வாணி.





# என்னால்

மெயின் காட் பஸ் ஸ்டாப்பில், ஸ்ரீனிவாச நகர் வழியாகச் செல்லும் வயலூர் பஸ்ஸுக்காகக் காத்திருந்தாள் அம்சவல்லி. இரு கைகளிலும், காய்கறிப் பைகளைத் தூக்க முடியாமல் தூக்கிக் கொண்டிருந்தாள்.

தெப்பக்குளத்தின் இரு பக்கங்களிலும் விற்கும் 'பசபச'வென்ற காய்கறிகளை வாங்குவதற்கென்றே வாரம் ஒருமுறை அம்சவல்லி இங்கு வந்து விடுவாள். அப்படியே குறுக்கே புகுந்து, சத்திரம் பஸ் நிறுத்தத்திற்குச் சென்றால் பஸ்ஸில் உட்காருவதற்கு இடம் கிடைக்கும்.

அவ்வளவு தூரம், கையில் பைகளையும் தூக்கிக் கொண்டு நடப்பது சிரமமாக இருந்ததால், இங்கு வந்து விட்டாள்.

'பஸ்ஸுலே உட்காருவதற்காவது இடம் கிடைக்குமோ, இல்லே, நம்ம ராசி அதுலேயும் நின்னுட்டு தான் போகணுமோ' - மனதுக்குள் புலம்பல்.

நல்ல நெரிசலுடன் வயலூர் பஸ் வந்ததும், எப்படியோ ஏறி விட்டாள். உட்காருவதற்கு சீட்டே காலியாக இல்லை. சுற்றுமுற்றும் கண்களை ஓட விட்டாள். நல்லவேளை, ஏதோ கல்லூரி மாணவி போலிருக்கிறது. பையுடன் நிற்கும் அம்சவல்லியைப் பார்த்ததும், எழுந்து இடம் விட, ''நன்றிம்மா,'' என்றபடி உட்கார்ந்ததும்தான் உயிரே வந்தது.

'வீட்டுக்குப் போனதும் உட்காரவா முடியும்' என்ற நினைப்பே ஆயாசத்தைத் தந்தது. இரவு சமையலை ஆரம்பிக்க வேண்டும். அவள் மகன் பார்த்திபனுக்கு எல்லாம் சூடாக இருக்க வேண்டும்.

மருமகள் லக்ஷ்மி வருவதற்கு இன்று நேரமாகும் என்று சொல்லி இருந்தாள். அவள் மத்திய அரசு அலுவலகம் ஒன்றில் வேலை பார்த்து வந்தாள்.

வேலை பார்க்கும் பெண்ணை மகனுக்குத் திருமணம் செய்து வைத்தது தான் செய்த பெரும் தவறு என்று இப்போது தோன்றியது அவளுக்கு.

பார்த்திபன் வந்ததும், இரண்டிலொன்று இன்று கேட்டு விட வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டு, சமையலைக் கவனிக்க ஆரம்பித்தாள் அம்சவல்லி.

மகன் வந்ததும், காப்பி கொண்டு வந்து கொடுத்தாள். அருகில் வந்து அமர்ந்த தாயை, 'என்ன?' என்பது போல் நிமிர்ந்து பார்த்தான், பார்த்திபன்.

''பார்த்திபா! வர, வர என்னால ரொம்ப முடியல்லேப்பா. எனக்கும் வயசாகுது இல்லே. மெயின்காட் போய் காய்கறி



வாங்கிட்டு வரதுக்குள்ளே போதும் போதும்னு ஆயிடுக்க. வந்ததும் வராததுமா ராத்திரி சமையல். ஓய்வு, ஒழிச்சல் இல்லாம ரொம்பக் கஷ்டமா இருக்கு'' சலித்துக் கொண்டாள் அம்சவல்லி.

''ஏம்மா, இங்கே பக்கத்திலே கிடைக்கற காய்கறியை வாங்கிக்கன்னா, கேட்க மாட்டேங்கிறே. எங்க ரெண்டு பேராலேயும் முடிய மாட்டேங்குது. நேரமும் கிடைக்கறதில்லே.''

''உன் பொண்டாட்டி ராத்திரி சமையலாவது செய்யக் கூடாதா? எல்லாம் நானே செய்ய வேண்டி இருக்கு. முக்கால்வாசி நாள் லேட்டா வர்றா.''

''அதுக்கு என்னம்மா பண்றது? ஆபீஸுக்குப் போற பொண்ணுன்னா, அப்படித்தான். நீதானே வேலை பார்க்கற பொண்ணா இருந்தாத்தான் இந்தக் காலத்துல சமாளிக்கலாம்னு பார்த்துப் பண்ணி வெச்சே. இப்பப் புலம்பினா எப்படிம்மா?''

''அதுக்காக எல்லாமே மாமியாரே செய்யட்டும்னு விட்டுட வேண்டியது தானா? நானும் சின்னப் பொண்ணா?''

''அவ செய்யறேன்னாலும் நீ விட மாட்டேங்கறே. அவ செய்யறது உனக்கு மனசுக்குப் பிடிக்கலே. அதுதான் அவ ஒதுங்குறா.''

''அதனால, ரொம்ப நல்லதுன்னு அப்படியே விட்டுடறதா? 'பரவாயில்லே அத்தே! நான் பார்த்துக்கறேன் நீங்க உட்காருங்க'ன்னுதான் சொல்லணும்.''

அம்மா எந்த நேரத்தில் எப்படிப் பேசுவாள் என்று அவனுக்கே புரியவில்லை.

''இன்னிக்கு லக்ஷ்மி வந்ததும் நானே சொல்லிடறேன்மா.''

''நீ ஒண்ணும் சொல்ல வேண்டாம். நாளைக்கு நான் மதுரைக்கு, நம்ம சுமித்ரா வீட்டுக்குக் கிளம்பறேன். ஒரு பத்து, பதினைஞ்சு நாள் நிம்மதியா இருந்துட்டு வரப் போறேன், அப்ப லக்ஷ்மிதானே கவனிக்க ஆகணும். சுமித்ராவும் அங்கே ஒண்டியா கிடந்து அல்லாடறா.''

''தாராளமாப் போயிட்டு வாம்மா. பதினைஞ்சு நாள் என்ன, ஒரு மாசம் வேணும்னாலும் இருந்துட்டு வா,'' என்றான் பார்த்திபன்.

**அ**ன்று இரவு மனைவி வந்ததும் விஷயத்தைச் சொன்னான்.

''அதனால என்னங்க, அத்தைக்கும் பாவம், எங்கே ரெஸ்ட் கிடைக்குது? வேலை சரியாத்தான் இருக்கு. இப்படிக் கட்டாயமா ரெஸ்ட் எடுத்துட்டாத்தான் உண்டு. நாம எப்படியாவது சமாளிக்கலாம்,'' என்ற லக்ஷ்மியைப் பரிவோடு அணைத்தான் பார்த்திபன்.

**ம**றுநாளே அம்சவல்லி மதுரைக்குக் கிளம்பி விட்டாள். சுமித்ராவின் வீடு போய்ச் சேர்ந்த போது, சுமித்ரா வீட்டில் இல்லை. எங்கோ வெளியில் போயிருந்தாள்.

அஸ்வினி

அவள் மாமனார் கோபாலன் கிரைண்டரில் மாவு அரைத்துக் கொண்டிருந்தார். பேரன் சரவணகுமார் வெளியில் விளையாடிக் கொண்டிருந்தான்.

''அடடே! வாங்க சம்பந்தி! என்ன இவ்வளவு தூரம்?'' மாவு அரைத்த கையுடன் வந்து உபசரித்தார் கோபாலன்.

வாங்கி வந்த பிஸ்கட்டுகளையும், பழங்களையும் பேரன் கையில் கொடுத்தாள்.

''கமித்ரா வீட்டுல இல்லியா? நீங்க போய் கிரைண்டரில் மாவு அரைச்சிட்டு...''

''அதனால என்ன சம்பந்தி? நம்ம வீட்டு வேலையைத்தானே செய்யறோம். கமித்ரா லேடீஸ் கிளப் ஃபங்ஷன் ஏதோ இருக்குன்னு போயிருக்கு. ராத்திரி அது தானே வந்து கிண்டாடணும். எனக்கும் பொழுது போன மாதிரி இருக்கும்.''

''அதுக்காக.. ஆம்பளை, நீங்க போய் இதெல்லாம் செய்யணுமா?''

''நம்ம வீட்டு வேலை செய்யறதுல ஆம்பளை என்ன, பொம்பளை என்ன? மத்தியான வேளைல பொழுதுபோகாம கிண்டாடிக்க மருமக. லேடீஸ் கிளப் போகட்டுமா மாமான்னு கேட்டுது. போயிட்டு வாம்மான்னு அனுப்பி வைச்சேன். இருங்க... காப்பி கலந்து எடுத்துட்டு வரேன்,'' என்றவாறு கையை அலம்பிக் கொண்டு வந்தார் கோபாலன்.

''நீங்க பேசாம உட்காருங்க. நானே போய்க் கலந்து எடுத்துட்டு வரேன்'' - சமையலறைக்குச் சென்று இரண்டு டம்ளர்களில் காப்பி கலந்து எடுத்து வந்தாள்.

''உங்களை வேலை செய்ய விட்டுட்டு, அவ எதுக்கு வெளியே போறா?'' காப்பியை எடுத்து உறிஞ்சியவாறு கேட்டாள் அம்சவல்லி.

''இதுல தப்பு ஒண்ணுமில்லே சம்பந்தி. அவ போனப்புறம் - அதான் எங்க வீட்டு அம்மா - கம்மா உட்காரவே பிடிக்கல்லே. வயசாக ஆக, ஆகப் பாருங்க கம்மா உட்கார்ந்தா சோம்பல் ஜாஸ்தியாகும். மத்தவங்க செய்றதுல எல்லாம் குத்தம் கண்டு பிடிக்கத் தோணும். நம்ம மவக இருக்கே, அது குரங்கு. நிமிஷத்துக்கு நிமிஷம் தாவும், மாறும். ஏதாவது வேலைல மூழ்கிட்டோம்னு வைங்க, வேறே எதுக்கும் நேரம் இருக்காது பாருங்க.

''கமித்ராவுக்கு என்ன சின்ன வயசு தானே! அதுக்கும் நாலு இடத்துக்குப் போகணும், வரணும், அனுபவிக்கணும்னு ஆசை இருக்காதா என்ன? நாமளும் அந்த வயசைத் தாண்டி வந்தவங்கதான் இல்லியா சம்பந்தி!'' என்றபடி சரவணனை அழைத்து அவனுக்குப் பிஸ்கட், பழம் கொடுத்தார்.

''நம்ம பேரப் பிள்ளை இருக்கானே, அவனைப் பார்த்துப் பார்த்து வயத்துக்குக் கொடுக்கணும். இல்லேன்னா, ஏமாத்திப் புடுவான்.'' அம்சவல்லி மலைத்துப் போனாள்.

இரவு கமித்ரா வீடு திரும்பியதும், அம்மாவின் திடீர் வருகையைப் பார்த்து ஆச்சரியம்.

கமித்ராவின் கணவன் கணேஷ்ும் வியப்போடு கேட்டான்.

''என்ன, அத்தே! திடீர் விசிட்?''

''ஒண்ணுமில்லே, மாப்பிள்ளே. ஏதோ திடீர்னு தோணிச்சு. உங்க எல்லாரையும் பார்த்துட்டுப் போகலாம்னு புறப்பட்டு வந்தேன்'' என்றாள்.

''பத்துப் பதினைஞ்சு நாள் இருந்துட்டுத்தான் போகணும்'' - உபசரித்தான் கணேஷ்.

இரவு, வேலை முடிந்ததும், அம்சவல்லி மெதுவாக கமித்ராவிடம் கேட்டாள்.

''ஏன் கமித்ரா! உன் மாமனார், வீட்டுல எல்லா வேலையும் செய்வாரா என்ன?''

''ஆமாம்மா. அவர் மட்டும் இல்லேன்னா எனக்கு ரொம்பத் திண்டாட்டம்தான். மாமியார் இருந்தா, எப்படிச் செய்வாங்களோ அப்படிப் பார்த்துப் பார்த்துச் செய்யறார். காய்கறி நறுக்கறதிலேருந்து, சரவணனைப் பார்த்துக்கறதிலேருந்து எல்லா வேலையும்... வெளியிலே போக, வர எனக்குச் சர்வ சுதந்திரம்தான். உண்மையிலேயே நான் ரொம்ப கொடுத்து வைச்சவம்மா,'' என்ற மகளை மகிழ்ச்சியுடன் பார்த்தாள், அம்சவல்லி.

மறுநாளே, அவர்களது வேண்டுகோளையும் மீறி அங்கிருந்து கிளம்பி விட்டாள். பஸ்ஸில் வரும் போது, அவள் மனதில் தடையில்லாமல் எண்ணங்கள் புரண்டன.

'கமித்ராவோ வேலைக்குச் செல்லாதவள். அவளுக்கு அவள் மாமனாரே அவ்வளவு உதவிகளை, தானே மனப்பூர்வமாகச் செய்யும் போது, வேலைக்குப் போய் உழைத்து விட்டு ஊதியம் கொண்டு வரும் தன் மருமகளுக்குத் தான் எவ்வளவு உதவிகள் செய்ய வேண்டும்! அதுவும் அவ்வளவு பணிவான பெண்ணுக்கு... எல்லாமே, நம் எண்ணங்களின் வக்ரம்தான் கமித்ராவின் மாமனார் சரியாகத்தான் சொன்னார்.'

பத்துப் பதினைந்து நாள் கழித்துத் தான் வருவேன் என்று கிளம்பியவள், மறுநாளே புறப்பட்டு வந்து நின்றதும் அல்லாமல், வந்தவுடன் சமையலறைக்குள் நுழைந்ததன் காரணம் புரியாமல், விழித்தனர் பார்த்திபனும், லக்ஷ்மியும்.



பையனின் தந்தை : ''பக்கத்து ரூமில் யாரு பாடுறது?''

பெண்ணின் தந்தை : ''என் பொண்ணுதான். வேற ஒரு பார்ட்டி பெண் பார்த்துக்கிட்டு இருக்காங்க.''

- வி. கெ. ஷ்குமார்




# மூளைத் திறனை முழுதும் பயன்படுத்தி முன்னேறுங்கள்!

பொன். இளங்கோ

மூளைமாற்று அறுவைச் சிகிச்சைக்காக ஒரு மூளை தேவைப்பட்டது.

''இது அமெரிக்கரின் மூளை; விலை ஐம்பதாயிரம் ரூபாய்.''

''இது?''

''இது ஜப்பானியரின் மூளை; விலை இருபத்தைந்தாயிரம் ரூபாய்!''

''இது?''

''இது இந்தியரின் மூளை. ஒரு லட்சம் ரூபாய்.''

''என்னது! இந்தியரின் மூளைக்கு ஏன் அத்தனை விலை?''

''இது புத்தம் புதுசு. உபயோகப்படுத்தாதது. அதனால்தான்!''

ஜோக் ஒருபுறமிருக்க, மூளைத் திறன் உபயோகத்தை அதிகரிப்பது சாத்தியமா?

சாத்தியமே.

எப்படி?

நம் மூளை இரண்டு பகுதிகளாக உள்ளதை முதன் முதலில் ஆராய்ந்து அறிந்தார் டாக்டர் ராஜர் ஸ்பெர்ரி. சில குறிப்பிட்ட செயல்களில் சிலர் வல்லுநர்களாய் இருப்பதற்கான அடிப்படையையும் ஆராய்ந்து அறிந்து, அதற்காக 1981- ல் நோபல் பரிசு பெற்றார்.

இடது மூளை, மொழி, கணிதம், பேச்சு, பகுத்தறிவுக்கு உட்பட்ட செயல்கள் இவற்றுக்கு.

வலது மூளை, கலை, இசை, கற்பனைத் திறன், காட்சி ரசனை, ஆன்மீகம் முதலியவற்றுக்கு.

நம்மில் பலர் இடது மூளை வளர்ச்சிக்குத் தரும் முக்கியத்துவத்தை, வலது மூளை வளர்ச்சிக்குத் தருவதில்லை. அதனால்தான் பலரின் செயல் திறன் குறைவாக இருக்கிறது. உதாரணமாக, கணவன் மட்டும் சம்பாதிக்கும் குடும்பத்தின் வாழ்க்கைத் தரம் என்ன? கணவன்-மனைவி இருவரும் சம்பாதிக்கும் குடும்பத்தின் வாழ்க்கைத் தரம் என்ன? அதே போல, இடது மூளையும் வலது மூளையும் இணைந்து ஒத்துழைக்கும்போது ஒருவரின் செயல் திறன் அதிகரிக்கிறது. ஐந்து மடங்கு அதிகரிப்பதாக ஆராய்ச்சியாளர்கள் கண்டறிந்திருக்கிறார்கள்.

ஒருவர் வலது மூளையைப் பயன்படுத்தி இசையை அநுபவிக்கக் கற்றுக் கொள்ளுகிறார். மற்றொருவர் இடது மூளையைப் பயன்படுத்தி இசைப் பயிற்சியை மேற்கொள்ளுகிறார். இடது, வலது மூளை இரண்டும் ஒத்துழைக்கும் இன்னொருவரோ இசைப் பாடங்களைக் கற்றுக் கொள்ளுவதோடு, இசையை அநுபவித்து ரசிக்கவும் கற்றுக் கொள்ளுவதால் இசைஞானி ஆகிறார்!

வெகு எளிதான பயிற்சிகள் சிலவற்றை நம் முன்னோர் நமக்குத் தந்திருக்கிறார்கள்.

வரைதல் (டிராயிங்) அல்லது சித்திரம் தீட்டுதல் (பெயின்டிங்) ஏதாவது ஒன்றை ஹாபியாகக் கொள்ளுங்கள். தினமும் பதினைந்து நிமிடம் உங்கள் கற்பனைக் குதிரையை ஓட விடுங்கள்.

ஒரு பதினைந்து நிமிடம் உங்கள் மனத்துக்குப் பிடித்த இசையை ரசித்து அநுபவியுங்கள்.

இன்னொரு பதினைந்து நிமிடம் இறைவனைப் பிரார்த்தியுங்கள்.

நேரம் கிடைக்கும் பொழுது ஜிக்சா பஸில்கள் எனப்படும் இருகுவெட்டுப் புதிர்களைப் பொருத்துங்கள். உங்கள் குழந்தைகளுக்கும் வாங்கிக் கொடுங்கள்.

நீங்கள் உங்கள் வாழ்க்கையில் காணப் போகும் அதிவேக வளர்ச்சி, நீங்கள் உங்கள் மூளைத் திறனை அதிகமாக உபயோகிக்க ஆரம்பித்து விட்டீர்கள் என்பதற்குச் சான்று கூறும்!

# மோதிரக் கையால் ஒரு குட்டு!

பாரிஸில் ஷூட்டிங் முடிந்து விட்டது. லண்டன் மட்டுமே பாக்கி. உடனே புறப்பட்டுத் தாய் நாடு திரும்பினாலும் இறந்து போன என் தாயின் முகதரிசனம் கூடக் கிடைக்காது. ஆகவே ஒருவழியாக லண்டன் படப்பிடிப்பையும் முடித்துக் கொண்டு கிளம்பி விடலாம் என்று தீர்மானித்தேன். அதன்படியே வீட்டுக்குச் செய்தி அனுப்பி விட்டு, துயரத்தை அடக்கிக் கொண்டு படப்பிடிப்பில் ஈடுபட்டேன்.

இப்படிப் பலவிதமான பிரச்னைகளைச் சமாளித்துக் கொண்டு நாங்கள் தயாரித்த படம் ''சிவந்த மண்''. மாபெரும் அளவில் செலவு செய்து, பிரும்மாண்ட செட்டுகள், வெளிநாட்டுப் படப்பிடிப்பு, டாப் ஹீரோக்கள் என்று திட்டமிட்டு ஹிந்தி, தமிழ் இரண்டிலும் எடுக்கப்பட்ட படம் எந்த அளவுக்கு வெற்றி பெற்றது? தமிழில் 'ஓகோ' என்று ஓடியது. ஆனால் ஹிந்தியில் நாங்கள் எதிர்பார்த்த அளவு ஓடவில்லை.

கணக்குப் பார்த்த போது மொத்தத்தில் சித்ராலயாவுக்கு நஷ்டம்தான். கண்ணை மூடிக் கொண்டு இஷ்டப்பட்டபடி செலவு செய்தது எவ்வளவு தவறு என்று எனக்குப் புரிந்தது. செலவில் சிக்கனம் காட்டியிருந்தால் லாபமில்லாவிட்டாலும் நஷ்டத்தையாவது தவிர்த்திருக்கலாம். ஒட்டுமொத்தமாக நஷ்டம் என்றாலும் கூட ''சிவந்த மண்'' எனக்கு ரொம்பவும் திருப்தி அளித்த படம். சிவாஜியுடன் இணைந்து நான் பணியாற்றிய அந்தப் படம் வெற்றி பெற்றது எனக்கு ரொம்ப ஆறுதல்.

நூறாவது நாள் விழாவுக்குத் தலைமைதாங்கக் கலைஞர் கருணாநிதியைத் தான் அழைத்தேன். அன்று அண்ணா அமைச்சரவையில் அவர் மந்திரி. மகிழ்ச்சியுடன் ஒப்புதல் அளித்தார். விழாவில் நான் முதலில் பேசிய போது, ''சிவந்த மண் படத்துக்கு முதலில் கலைஞரைத்தான் வசனம் எழுதும்படி கேட்டேன்; ஆனால் அதற்குரிய சூழ்நிலை அமையாது போய் விட்டது'' என்று சொன்னேன்.

இதன் பின்னணி இதுதான் : சிவந்த மண் படத்தை ஆரம்பிக்கு முன் கலைஞரை வசனம் எழுதுமாறு கேட்டுக் கொண்டேன். அதற்கு அவர், ''எனக்கும் விருப்பம்தான்; ஆனால் அமைச்சராக இருக்கும் ஒருவர் சினிமாவுக்கு வசனம் எழுதலாமா; அரசு விதிமுறைகளில் இடம் இருக்கிறதா என்று பார்க்க வேண்டும். அதைத் தெரிந்து கொண்டு சொல்கிறேன்'' என்றார். அத்துடன் அந்த விஷயத்தை நான் விட்டு விட்டேன்.

ஆனால் கலைஞர் விடவில்லை; தொடர்ந்து ஆராய்ந்திருக்கிறார் என்பது எனக்கு அந்த விழாவில் அவர் வைத்த குட்டு உணர்த்தியது. அவர் பேசும் போது பின்வருமாறு சொன்னார் : ''ஸ்ரீதர் என்னை வசனமெழுதும்படி கேட்ட போது, 'அரசாங்க விதிமுறைகள் இடமளித்தால் எழுதுகிறேன்' என்றுதான் குறிப்பிட்டேன். அப்படி ஆராய்ந்து பார்த்த போது தடை ஏதும் இல்லை என்பதாகத் தெரியவந்தது. ஆகவே, நான் எழுதத் தயாராகத்தான் இருந்தேன். ஆனால் ஸ்ரீதர்தான் என்னை அதன் பிறகு வந்து கேட்கவேயில்லை! 'விதிமுறைகளைப் பார்த்து விட்டீர்களா? எழுதுகிறீர்களா?' என்று விசாரித்திருந்தால் நிச்சயம் மகிழ்ச்சியோடு ஒப்புக் கொண்டிருந்திருப்பேன்!''

மோதிரக் கையால் வைக்கப்பட்ட இந்தக் குட்டை என்னால் மறக்கவே முடியாது. சரியான நோஸ் கட்! 'அமைச்சராய் உள்ளவருக்கு இடைவிடாத அரசுப் பணிகளிடையே நேரம் இருக்குமோ இராதோ; அதனால், ஷூட்டிங் ஷெட்யூல் தாமதப்படுமோ என்னமோ' என்றெல்லாம் நான் பயந்ததுதான் அவரை மறுபடியும் நான் அணுகாததற்குக் காரணம். ஆனால் இப்படி நான் தயங்காமலிருந்திருந்தால், கலைஞர்



என். வி. சக்ரவர்த்தி ( படம் - உதவி : 'பிலிம் நியூஸ் ஆனந்தன்')

டைரக்டர் ஸ்ரீதர்

வசனமும் எழுதியிருந்தால், ''சிவந்த மண்'' இன்னும் பெரிய அளவில் வெற்றி பெற்றிருக்கும் என்றும், ஹிந்திப் படம் சரியாக ஓடாததால் ஏற்பட்ட நஷ்டம் கூட ஈடுகட்டப்பட்டு, ஒட்டுமொத்த லாபமாக மாறியிருக்கும் என்றும் கூட இப்போது தோன்றுகிறது.

இந்தியில் ''சிவந்த மண்'' சரியாக ஓடாததால் ஏற்பட்ட நஷ்டத்தை சித்ராலயா நிறுவனத்துக்கு எப்படி ஈடுகட்டுவது என்பதே இப்போது எங்கள் முன் பெரிய பிரச்னையாக உருவெடுத்து நின்றது. ஒரு படத்தில் ஏற்பட்ட நஷ்டத்தைத் தீர்க்க வழி, இன்னொரு படம் எடுப்பது தானே! அதைத்தான் நாங்களும் செய்தோம். தரமான காமெடிச் செயல்படத் திட்டமிட்டு, முதல் காரியமாக உட்லண்ட்ஸில் அறை எடுத்து, கோபு, சக்கரவர்த்தி என்ற என் உதவியாளர், வெண்ணிற ஆடை மூர்த்தி, நான் ஆகிய நால்வரும் இவ ரும் கூடி, கதை டிஸ்கஸ் செய்தோம். காமெடி என்று தீர்மானித்து இவ ரும் பேசியதில் உருவான கதைதான், ''உத்தரவின்றி உள்ளே வா!''



* கருணாநிதி : மோதிரக் கையால் குட்டு!

இந்தக் கதை விவாதிக்கப்பட்டு வரும் போதே என் மனத்தில் இன்னொரு கதைக்கான கருவும் உதயமாகி விட்டது! சீக்கிரமே கதை வடிவமும் பெற்றது. அதையும் நான் நண்பர்களிடம் கூற, ''நன்றாயிருக்கிறதே'' என்றனர். அந்தக் கதைதான், ''அவளுக்கென்று ஓர் மனம்!''

'ஏன், இரண்டு படங்களையும் ஒரே சமயத்தில் எடுத்தால் என்ன? இரண்டுமே வெற்றி பெற்றால் சித்ராலயாவுக்கு ஏற்பட்டிருக்கும் நஷ்டம் சீக்கிரமாகத் தீர்ந்து போகுமே?' இப்படி எண்ணியது என் மனம். நண்பர்கள் இந்த யோசனையை ஏற்றார்கள். அப்புறம்தான் சித்ராலயாவின் வரலாற்றிலேயே இல்லாதவிதமாய்ப் புதிய திட்டம் ஒன்று என் உள்ளத்தில் உருவாயிற்று. அதாவது ''அவளுக்கென்று ஓர் மனம்'' படத்தை நான் டைரக்ட் செய்வது; காமெடி சப்ஜெக்டான ''உத்தரவின்றி உள்ளே வா'' படத்தை வேறு ஒருவரைக் கொண்டு டைரக்ட் செய்யச் சொல்வது. இந்த என் யோசனை பார்ட்னர்களுக்கு ஆச்சர்யத்தையும் திகைப்பையும் அளித்ததில் வியப்பில்லை. ''ஏன்? ஏன்? எதற்காக?'' என்று பரபரப்புடன் கேட்டனர்.

டைரக்டர் என்ற முறையில் எனக்குப் பூரண சுதந்திரம் இருக்க வேண்டும் என்று கருதித் தானே நண்பர்களைப் பாகஸ்தர்களாகக் கொண்டு சித்ராலயா ஆரம்பித்து நடத்தி வந்தேன்? அவ்வாறிருக்க இப்போது நானே வேறு ஒரு டைரக்டரைப் போடலாம் என்று சொன்னால் வியப்பாகத் தானே இருக்கும்!

''எல்லா சித்ராலயா தயாரிப்புக்களையும் நானே ஏன் டைரக்ட் செய்ய வேண்டும்? பிறருக்கும் வாய்ப்புத் தர வேண்டும் என்ற எண்ணம் எனக்கு இப்போது ஏற்பட்டிருக்கிறது. ஒருவேளை அது என் மனம் விசாலப்பட்டு வருவதன் ஓர் அடையாளமாக இருக்கலாம்'' என்றேன்.

யாரை டைரக்டராகப் போடுவது? என்னிடம் உதவியாளராக இருந்து கதை டிஸ்கஷனிலும் கலந்து கொண்ட என். சி. சக்கரவர்த்தியிடமே டைரக்ட் செய்யும் பொறுப்பை ஒப்படைத்தேன். படத் தயாரிப்பு, நிர்வாகம் சம்பந்தமான பொறுப்புக்களை நண்பர் கோபுவிடம் விட்டு விட்டேன். வசனமும் திரைக் கதையும் கோபுதான்.

''காதலிக்க நேரமில்லை'' படத்துக்குப் பிறகு என் படங்களில் ரவிச்சந்திரனுக்கு வாய்ப்பு ஏதும் தரப்படவில்லை. அவருக்கு இது ஒரு குறையாகவே இருந்து வந்தது. இப்போது ''உத்தரவின்றி உள்ளே வா'' படத்துக்கு அவரை அழைத்து, வாய்ப்புக் கொடுத்தேன். ஹீரோயின் காஞ்சனா. வெ. ஆ. மூர்த்தி, நாகேஷ், மாலி முதலியோர் நடித்தார்கள்.

ஒருபுறம், ''உத்தரவின்றி உள்ளே வா'' படப்பிடிப்பு நடந்து கொண்டே இருக்க, இன்னொருபுறம் நான் ''அவளுக்கென்று ஓர் மனம்'' படத்தின் வேலைகளை ஆரம்பித்துத் தொடர்ந்தேன். அந்தச் சமயத்தில் இன்னொரு யோசனையும் உதயமாயிற்று. 'அவளுக்கென்று ஓர் மனம்' படத்தை ஹிந்தியிலும் எடுத்தால் என்ன...?'

**உங்கள் செல்வம் :**

# மோசடியைவிடச் சோகமான அரசின் மெத்தனம்

ஜானகிராமன் கமிட்டியின் இரண்டாவது அறிக்கை, அரசு பத்திரங்கள் பேரத்தில் வங்கிகள் மேலும் பல ஒழுங்கீனங்களைச் செய்திருப்பதை எடுத்துக் காட்டியது. இந்த ஒழுங்கீனங்கள் 500 கோடி அளவில் நடந்திருக்கிறது. முதல் அறிக்கையில் 3000 கோடி ஒழுங்கீனங்கள் கட்டிக் காட்டப்பட்டது. ஆக மொத்தம் 3500 கோடி.

பல உள்நாட்டு வங்கிகள் மட்டுமின்றி, அயல்நாட்டு வங்கிகளும் செய்யக்கூடாத காரியங்களையெல்லாம் செய்து, துரித லாபம் காண முற்பட்டிருக்கின்றன. நாலு அயல்நாட்டு வங்கிகள் மட்டுமே ஆயிரம் கோடி லாபம் கண்டிருக்கின்றன. இந்த அரசு பத்திர பேரங்களில் ஒரு வங்கியின் லாபம் என்பது மற்றொரு வங்கிக்கு நஷ்டம் என்பதாகவே முடியும். ஆக, அயல்நாட்டு வங்கிகள் தங்கள் லாபத்தைத் தங்கள் நாட்டுக்கு அனுப்பி வைக்கும் போது ஏமாந்த சோணகிரிகளாக இருப்பது உள்நாட்டு வங்கிகளே. இவை அரசுடைமை ஆன வங்கிகள் என்பதால் கடைசியில் ஏமாந்து போவதும் நஷ்டம் அடைவதும் இந்நாட்டு மக்கள்தான்.

இப்போது ரிசர்வ் வங்கி விழித்துக் கொண்டிருக்கிறது. இரும்பவும் இவ்வாறெல்லாம் நிகழாதிருக்கத் தக்க கட்டுப்பாடுகளை விதித்து, மேற்பார்வையிடும் என்று நம்பலாம்.

இதைவிடவும் முக்கியமான விஷயம் கிட்டத்தட்ட ஒரு மாதமாகப் பங்கு மார்க்கெட் இந்த நாட்டில் செயலற்றுப் போனது தான். மத்திய அரசு, ஓர் அவசரச் சட்டம் மூலம், ஹர்ஷத் மேத்தா நிறுவனங்கள், சில பம்பாய்ப் பங்குமார்க்கெட் தரகர்கள், ஃபேர் குரோத் நிறுவனம் போன்றவற்றின் சொத்துக்களைச் செயலற்றுப் போகச் செய்தது. அதாவது இவர்களின் சொத்துக்களை வாங்கவோ, விற்கவோ, அடமானம் வைக்கவோ எதுவுமே செய்ய முடியாது. இந்த அரசு உத்தரவு பிறந்ததும் பங்கு மார்க்கெட்டின் இயக்கமே ஸ்தம்பித்துப் போயிற்று. காரணம் பல பங்கு மார்க்கெட் தரகர்கள், அரசு ஆணைக்கு உள்ளான இந்த நிறுவனங்கள் அல்லது தரகர்களுக்குச் (Broker) சொந்தமான பங்குகளை வாங்கியிருந்தால் அவர்கள் பணமெல்லாம் நஷ்டமாகி விடும் அபாயம் இருந்தது. அதனால் நாடு முழுவதும் பல பங்கு மார்க்கெட் தரகர்களிடையே பயமும் கலக்கமும் நிலவியது.

தற்போது ஹர்ஷத் மேத்தா குறித்தும் பங்கு மார்க்கெட் மோசடி பற்றியும் விசாரிக்க உருவாக்கப்பட்ட விசேஷ நீதிமன்றம் நிலைமையைத் தெளிவாக்கி, அரசு உத்தரவுக்கு முன்பாகவே நியாயமான முறையில் வாங்கப்பட்டுள்ள பங்குகளைப் பதிவு செய்யலாம் என்று அறிவித்துள்ளது. இதனால் மறுபடி பங்கு மார்க்கெட் இயங்கத் தொடங்கி படிப்படியாகச் சூடுபிடிக்கும் என்றும் கருதப்படுகிறது.

ஆனால் இந்த ஒரு மாத காலத்துக்குள் மக்கள் பட்ட அவதி கொஞ்ச நஞ்சமல்ல. உதாரணமாகத் தமது மகளின் கல்யாணத்தை நிச்சயித்து விட்டு, ஷேர்களை விற்று நடத்தி விடலாம் என்று நம்பிக் கொண்டிருந்த ஒருவர் அது முடியாமல் போக, பலரிடமும் கடன் கேட்டுக் கையேந்தி படாதபாடு பட்டார். இவையெல்லாம் மக்களுக்குப் பங்கு மார்க்கெட்டில் நம்பிக்கை குறையச் செய்வன. ஒரு நாட்டின் தொழில் வளர்ச்சிக்கு முதலீடு என்பது அடிப்படைத் தேவை. அதனைப் பெற்றுத் தருவது பங்கு மார்க்கெட்டே. அதனிடம் மக்களுக்கு மதிப்பும் நம்பிக்கையும் குறையுமானால் நாடு எப்படி முன்னேற முடியும்?

இதுபோன்ற மோசடிகள் நடக்காதவாறு அரசு - குறிப்பாக நிதி அமைச்சகம் - கவனித்துக் கொண்டிருக்க வேண்டும் என்பது ஒருபுறமிருக்க, நடந்த பிறகு நிலைமையைச் சீராக்குவதில் காட்டப்படும் மெத்தனம் அதை விடவும் மோசமானது.

மக்களுடைய முழு நம்பிக்கையைப் பெறுவது போல் அரசும் வங்கிகளும் பங்கு மார்க்கெட் தரகர்களும் நடந்து கொள்ளாது போனால், தொழில் - பொருளாதாரத்தில் கொண்டு வரப்பட்டுள்ள நல்ல சீர்திருத்தங்களும் பயனற்றதாகப் போகும்.

**- வி. கோபாலன்**

# இனி ஒரு சதி

2

கதை: பத்மா ரவிசங்கர்

படம்:
















ஐ.ஸி.யூ வார்டு வாசலில் பட்லர் பெரியசாமி...
ICU
ஐயா நோவு நொடின்னு படுத்து இதுவரை நான் பார்த்ததில்லே... திடீர்னு என்னாச்சு..?


சே! பாஸ் பக்கத்திலே இருக்க முடியாம நம்மை வெளியி லேயே நிறுத்திட்டாங்களே..
தைரியமா இரு யுவராஜ்..


கிசு! கிசு!ன்னு ஆசையா கூப்பிடு வீங்களே, மாமா!
ரிலாக்ஸ் ஸார்.


ஒரு வேளை ஹார்ட் அட்டாக்கா இருக்குமோ?..
டாக்டர் வந்தா தெரிஞ்சுடுது. பொறுமையா இருங்க...


டாக்டர் மகேந்திரன் வெளியே வந்தார்...
ஒரு அதிர்ச்சியான நியூஸ். சந்திரசேகர் உணவுல யாரோ விஷம் கலந்திருக்காங்க... போலீஸுக்கு போன் பண்றேன்...
தொடரும்

**அமெரிக்க ஜனாதிபதி தேர்தல் :**

# புஷ்ஷோடு மோதும் பில் கிளின்டன்



● கிளின்டன்

**வ**ரும் அமெரிக்க அதிபர் தேர்தலில் ஜார்ஜ் புஷ்ஷைத் தோற்கடித்து விடுவார் என்று நம்பப்படும் அளவுக்கு, பில் கிளின்டனின் புகழ் இப்போது உச்சியில் இருக்கிறது.

தேர்தல் பேச்சுக்களில் மனிதர் என்னவெல்லாமோ சொல்லுகிறார் - தம்முடைய இளமைக் காலத்தைப் பற்றி மட்டும் பேச மறுக்கிறார் என்பதுதான் பெரிய குறை.

உணர்ச்சியைத் தூண்டிவிடுகிற மாதிரி, பழைய சம்பவங்களை நினைவு கூர்ந்து ஒன்றிரண்டு நிகழ்ச்சிகளைச் சொன்னால் குறைந்தா போய்விடும் என்று கிளின்டனின் தேர்தல் ஆலோசகர்கள் கூடக் குறைப்பட்டுக் கொள்ளுகிறார்கள்! நம்மூராயிருந்தால் பழைய கதைகளைச் சொல்லி, தாய்க்குலத்தைக் கண்ணீர் வடிக்கச் செய்து, அநுதாப அலை கேஸாக மாற்றப் பார்த்து விடுவார்கள்! ஆனால் கிளின்டனோ, ''எடுத்ததற்கெல்லாம் எதற்கு மூக்கால் அழுது கொண்டிருக்க வேண்டும்? சுயபச்சாத்தாபமே எனக்குப் பிடிக்காது!'' என்று தேர்தல் பிரசார ஆலோசகர்களிடம் அடித்துச் சொல்லிவிட்டார்.

அப்படியும் தூண்டித் துருவிக் கேட்டுச் சில விவரங்களைப் பெற்றிருக்கிறார்கள்:

வசதியில்லாத வாழ்க்கை, இளமையில். பிறக்கும் போது அப்பா உயிருடன் இல்லை. கார் விபத்து ஒன்றில் அவர் காலமான மூன்று மாதங்களுக்குப் பிறகுதான் கிளின்டன் பிறந்தார். அம்மாவின் பெற்றோரிடத்தில்தான் ஏழு வயது வரை வளர்ந்தார். அம்மா ரோஜர் கிளின்டனை மறுமணம் செய்து கொண்டார். வாயைத் திறந்தால் வசவு தவிர வேறு எதுவும் வெளிவராத சரியான குடிகாரர் அவர்! ''ஆனாலும் அப்பா அன்பானவர்தான்''... என்கிறார் கிளின்டன். ''நான் நிறையக் கஷ்டப்பட்டிருக்கிறேன். என்றாலும் கூட, எப்போதும் சிரித்த முகத்துடன் இருக்க வேண்டும் என்பதுதான் நான் அறிந்த தெல்லாம். வீட்டுக் கஷ்டத்தை எல்லாரிடமும் சொல்லிக் கொண்டிருக்க வேண்டும் என்று அந்த நாளிலேயே எனக்குத் தோன்றியது கிடையாது. அதை எல்லாம் சொல்லலாமா என்பதை விட, சொல்லுவதே தவறு என்று நினைத்தவன் நான்'' என்கிறார் கிளின்டன்.

தம்பி போதை மருந்து அடிமை; இப்போது ஒரு மாதிரி தேறி வருகிறாராம்.

''என் வாழ்க்கையில் முக்கியமான சம்பவங்களைப் பட்டியல் போடச் சொன்னால், அப்பா மெடிகல் சென்டரில் புற்று நோய் வந்து அவஸ்தைப் பட்டுக் கொண்டிருந்த போது, நான் படித்துக் கொண்டிருந்த ஜார்ஜ்டவுனிலிருந்து 260 மைல் பயணம் செய்து, அவரைப் பார்க்க வாரா வாரம் போய்விட்டு வந்ததைத்தான் முதலில் எழுதுவேன்!'' என்று ஒரு பத்திரிகையாளரிடம் கூறியிருக்கிறார் கிளின்டன்.

**கெ**ன்னடி மாதிரி இளமையோடு இணைந்த ஒரு வசீகரம் கிளின்டனுக்குப் பிளஸ் பாயின்ட். டெமாக்ரடிக் கட்சி வேட்பாளரான கிளின்டன் ஆர்க்கன்ஸாஸ் மாகாணத்துக்காரர். இப்போது ஆர்க்கன்ஸாஸ் மாகாண கவர்னர்.

சராசரி மனிதர்களின் ஒழுக்கம் பற்றி அதிகம் கவலைப்படாத அமெரிக்கர்கள், தங்களை ஆளுவோர் மட்டும் படு சுத்தமாக இருக்க வேண்டும் என விரும்புகிறார்கள்.

எனவே, ஜெனிஃபர் ஃப்ளவர்ஸ் என்ற பெண்ணுடன் கிளின்டன் ரொம்ப அந்நியோன்யமாய்ப் பழகி வந்தார் என்ற செய்தியை 'ஸ்டார்' பத்திரிகை முதல் பக்கத்தில் கொட்டை கொட்டையாய் வெளியிட்ட போது, 'மனிதர் என்ன செய்யப் போகிறார்?' என்று எல்லோருமே எண்ணினார்கள்.

செய்தி வெளியானவுடன் அவர் மனைவி ஹிலாரியிடம், கட்சிக்காரர் ஒருவர் கவலையுடன் தொடர்பு கொண்ட போது, மனைவி கேட்ட ஒரே கேள்வி : 'அவர் எப்படி இருக்கிறார்? ஒன்றும் அரண்டு போய் விடவில்லையே?' என்பதுதான். அவளுக்குக் கணவரின் பழைய வாழ்க்கை நன்கு தெரியும். இப்போது மகள் செல்ஸியுடன் அமைதியான வாழ்க்கை நடத்தும்போது பழையதை நினைப்பானேன்? டீவி பேட்டியில் அவர் இந்தச் செய்தியைச் சமாளித்த விதம் கிளின்டனைக் காப்பாற்றியது.

நன்றி : நியூஸ்வீக்

தொகுப்பு : எஸ். வி. என்.



குழப்ப வேண்டியதுதான்!

## நீங்கள் கேட்டவை - தராசு

# குஷ்புதான் அடுத்த பெண் முதல்வராமே?

● எஸ். கே. எம். மோகன், வேலூர்.

? *'நாங்கள் அதிகமாக விளம்பரம் செய்து கொண்டிருக்கவில்லை' என்று முதல்வர் கூறியுள்ளது பற்றி...?*

! நல்ல காலம் இதை அறிக்கையில் சொன்னாரே, முழுப் பக்க விளம்பரமாகக் கூறாமல்!

● வி. ரவி, தாசம்பாளையம்.

? *செயின்ட் ஜார்ஜ் கோட்டை என்று தற்போதுள்ள சட்டசபைக்கு முதல்வர் பெயரை வைக்கச் சொல்லி எந்த அமைச்சரும் ஆலோசனை கூறவில்லையா?*

! உஷ்... உரக்கச் சொல்லாதீர்கள்... நம் அமைச்சர்கள் சென்னையையே 'ஜெ'ன்னை ஆக்கி விடுவார்கள்!

● கே. எம். தங்கராஜு, நாமக்கல்.

? *சென்னையில் ஆகஸ்டு மாதம் நடைபெற இருக்கும் உலகத் திருக்குறள் மாநாட்டில் நிதி அமைச்சர் கலந்து கொண்டு விழாவைத் தொடங்கி வைக்கிறாராமே?*

! 'நறுக்'கென்று ரெண்டே வரி பேசி, பேச்சை முடித்துக் கொண்டால் பொருத்தமாயிருக்கும். சொல்லி வைத்தோம்!

● பாலசுப்பிரமணியன், சென்னை - 52.

? *'அண்ணாமலை தடை' எனக் கிளம்பிய புரளி பற்றி...?*

! கவுண்டரில் கியூ; பிளாக்கில் டிக்கெட்; தியேட்டர் ஃபுல்.

● எஸ். ப்ரியா, பாளையங்கோட்டை.

? *'நரசிம்மராவ் தொட்டதெல்லாம் தோல்வி' என்று சந்திரசேகர் கூறியிருப்பது பற்றி...?*

! இதைச் சந்திரசேகர் சொல்ல நேர்ந்தது தான் பரிதாபம்!

● ஆர். அப்துல் சலாம், திருச்சி.

? *'சத்யஜித்ரே ஒரு ஜீனியஸ் என்று ஒரு நாளும் என்னால் ஒப்புக் கொள்ள முடியாது' என்கிறாரே பாரதிராஜா?*

! பாரதிராஜாவை ஜீனியஸ் என்று எண்ணா விட்டாலும் உயர்வாக மதித்திருந்தோம்; தாழ்ந்து போகிறார்.

● சம்பத், வேலாயுதம்பாளையம்.

? *'தன் மீதான ஊழல் குற்றச்சாட்டுக்களின் பேரில் விசாரணைக் கமிஷன் அமைத்துத் தான் ஊழலற்றவர் என்பதை ஜெயலலிதா நிரூபிக்க முன்வர வேண்டும்' என்று டாக்டர் ராமதாஸ் கூறியிருக்கிறாரே?*

! சரியாப் போச்சு! கார்கள் தாக்கப்பட்டதாகப் புகார் செய்தால், 'காரில் போனவர்களே கல் எறிந்து தங்களைத் தாங்களே தாக்கிக் கொண்டு, பிறர் செய்ததாகப் புகார் பண்ணுகிறார்கள்' என்று அறிவிக்கும் 'ஜெயா'வா தன் மீதே விசாரணை கமிஷன் அமைத்துக் கொள்வார்? பகல் கனவு!



தாழ்ந்து போகிறார்!

● தென்றல் கார்த்தி, நாட்டரசன்கோட்டை.

? *சமீபத்தில் தங்கள் மனத்தைப் பாதித்த நிகழ்ச்சி?*

! வறுமை காரணமாக ரத்ததானம் செய்வது உடல் உறுப்புக்களைத் தானம் செய்வது என்பதே கொடுமை. அதற்கும் மேல் போதை மருந்துப் பழக்கத்துக்கு அடிமையான பம்பாய் நபர் ஒருவர், அதற்குக் காசு வேண்டும் என்பதற்காகவே சிறுநீரகத்தை விற்றது கொடுமையிலும் கொடுமை. இத்தகைய அரக்கத்தனமான உடல் உறுப்பு வியாபாரத்தை ஒழிக்கக் கடு



பகல் கனவு!



தாடியும் போச்சு!

மையான சட்டமும் தண்டனையும் உருவாக்கப்பட வேண்டும்.

● ஜி. மகேச்வரன், பின்னத்தூர். ❑

*? குஷ்புதான் அடுத்த பெண் முதல்வராமே?*

! கூட்டம் போட்டுப் பேச வேண்டியது தான். அதில் அவர், ''புரட்சித் தலைவியை யாராலும் அசைக்க முடியாது; எனக்கு அரசியலில் ஈடுபடும் ஆசை இல்லை; ஆனால் எதிர்காலத்தில் என்ன நடக்கும் என்று யாரால் கணிக்க முடியும்...?'' என்றெல்லாம் பேசிக் குழப்ப வேண்டியது தான்.

● மல்லிகை மன்னன், மதுரை.

*? ''வோட்டுப் போட்ட மக்களே இந்த நாட்டையும் அரசியல்வாதிகளையும் பற்றிக் கவலைப்படாத போது தனிமனிதனான நான் மட்டும் பெரிதாக என்ன செய்ய முடியும்?'' என்கிறாரே, சிவாஜி?*



● நல்ல காரியம்!

! பேச்சுக்கு ஏற்ப தாடியாவது வளர்க்கலாம். அதையும் தேவர் மகனுக்காக எடுத்து விட்டாரே!

● மா. பழனிசாமி, கோவை.

*? வேலை இல்லா திண்டாட்டத்தில் தமிழகம் முதலிடத்தை வகிக்கிறதாமே!*

! ஆகா! 'ஜெ' படம் போட்டு முழுப் பக்கச் சாதனை விளம்பரம் வெளியிட வேண்டியது தானே!



● [illegible]

● டி. சூரியமூர்த்தி, சிதம்பரம்.

*? ஜெயலலிதா செய்யும் உதவிகள் காமராஜரை நினைவு படுத்துவதாக அமைச்சர் செல்வகணபதி கூறுகிறாரே?*

! எம். ஜி. ஆரை நினைவுபடுத்தினால் ஆபத்து என்று எண்ணினாரோ, என்னவோ!



● ''தொட்ட தெல்லாம் தோல்வி!''

● ஐ. எஸ். வாசு, மாடம்பிள்ளைதர்மம்.

*? இந்தியப் பெண்களை அபுதாபியில் கற்பழித்தவர்களைச் சுட்டுக் கொல்ல உத்தரவிட்ட அரேபிய அரசு பற்றி...?*



● 'ஜெ'ன்னை!

! ஆக, நமது பெண்களுக்கு இங்கு கிடைக்கும் நீதி மற்றும் பாதுகாப்பை விட அபுதாபியில் அதிகம் கிடைக்கிறது!

● மாரி வெற்றிவேல், பட்டுக்கோட்டை.

*? வெங்கடராமனுக்கு அரசு பங்களா ஒதுக்கப்பட்டிருக்கிறதே, ராஜாஜிக்கு இதே போல் அரசு வீடு கொடுக்கப்பட்டதா?*

! இல்லை; அப்போது பாதுகாப்புப் பிரச்னையும் இன்று போல் பூதாகார வடிவம் எடுத்து நிற்கவில்லை.

● சிதம்பரன், சென்னை - 14.

*? இந்திரா காந்தியைக் குறைகூறி எழுதிய நூலுக்கு அகாதமி பரிசு தந்ததற்காக வருத்தப்பட்டிருக்கிறீரே? பிரதம மந்திரியாகி விட்டால் மகான் ஆகி விடுவாரா?*

! நான் அப்படிச் சொல்லவும் இல்லை; வருத்தப்படவும் இல்லை. நான் குறை கூறியிருப்பது சாகித்ய அகாதமியின் செயல்பாடு பற்றியே. ஒன்று அவர்கள் 'நூலுக்குப் பரிசு தந்தது சரி' என்று உறுதியாக இருக்க வேண்டும்; அல்லது 'தவறு நடந்து விட்டது' என்று தைரியமாக ஒப்புக் கொள்ள வேண்டும். இரண்டுங்கெட்டானாக, 'யாரோ பெரிசு செய்தார்கள் நாங்கள் கொடுத்தோம்' என்று வழியக் கூடாது. இதைத்தான் எடுத்துக்காட்டியிருந்தேன்.

● க. தியாகராஜன், நெய்வேலி.

*? ராஜீவ் நினைவு நிறுவனத்துக்கு 50 லட்சம் நிதி வழங்கியிருக்கிறாராமே ஹர்ஷத்மேத்தா?*

! அவர் செய்த ஒரே நல்ல காரியம் அதுவாகத்தான் இருக்கும். ரோசப்பட்டுக் கொண்டு திருப்பித் தந்து விட வேண்டாம் சோனியா. நல்ல காரியத்துக்குப் பயன் படுத்தட்டும்!

❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
ஜி. மகேசவரன்,
பின்னத்தூர் (அஞ்சல்),
உதயமார்த்தாண்டபுரம் (வழி)
காயிதே மில்லத் (மாவ) - 614 706.





# எம்.ஜி.ஆர். ரசித்த ஜி.என்.பி.சீடர்!

**எம்.** ஜி. ஆர். ஒரு நாள் காலை நேரத்தில் வானொலி கச்சேரி ஒன்றைக் கேட்டார். ரசித்ததோடு நில்லாமல், பாடியவரின் விலாசத்தை ரேடியோ ஸ்டேஷனில் விசாரித்துத் தெரிந்து கொண்டு, பாராட்டுக் கடிதமும் எழுதினார். அந்தப் பாடகர்...

தஞ்சாவூர் எஸ். கல்யாணராமன்.

இந்த ஆண்டு, சென்னை கிருஷ்ண கான சபையின் 'சங்கீத சூடாமணி' விருது பெறுகிறார் கல்யாணராமன். ஜி.என்.பி. யின் சீடர்களிலே, இந்த விருதை முதன் முதலில் பெறுகிறவர் கல்யாணராமன்தான்.

திருவனந்தபுரத்தில் சுவாதித் திருநாள் அகடமி முதல்வராக ஜி.என்.பி. இருந்தபோது, அங்கே கச்சேரி செய்யப் போயிருந்தார் கல்யாணராமன். அப்போது ஜி.என்.பி.க்கு உடல்நிலை சரியில்லை. "அரைமணிக்கு மேல் என்னால் இருக்க முடியாது" என்றார். கச்சேரி ஆரம்பித்துப் பத்து நிமிடம் கழித்துத்தான் வந்தார். ஆனால் மூன்று மணி நேரமும் இருந்து முழுக்கக் கேட்டபிறகு, "போகலாம் என்று நினைத்தேன். ஆனால் போகவே முடியாமல் பண்ணிவிட்டது உன் பாட்டு!" என்றார் ஜி. என். பி.

அதே போல, கல்யாணராமன் மியூசிக் அகடமியில் செய்த கச்சேரியின் ஒலிப்பதிவைக் கேட்டுவிட்டு அன்று இரவு பதினொன்றரை மணிக்கே திருவனந்தபுரத்திலிருந்து 'Keep it up my boy!' என்று கடிதம் எழுதினாராம். "ஆத்மார்த்தமாக ஊக்குவிப்பதில் அவருக்கு நிகர் வேறு யாரும் இருக்க முடியாது" என்கிறார் கல்யாணராமன்.

தஞ்சாவூர் சொந்த ஊரே தவிர, கல்யாணராமன் வளர்ந்தது, படித்தது எல்லாம் ஊட்டியில்தான். தகப்பனார் அரவங்காடு ராணுவ தளவாடத் தொழிற்சாலையில் அதிகாரியாக இருந்தார்.

சென்னை, மாநிலக் கல்லூரியில் படித்து முடித்தவுடன்தான், ஜி.என்.பி.யிடம் இசை பயிலச் சேர்ந்தார் கல்யாணராமன். இப்போது அவரே குருவாகி வாய்ப்பாட்டு தவிர, வயலினும் சொல்லிக் கொடுக்கிறார். இன்றைக்கு முன்னணிக்கு வந்துவிட்ட பல வாய்ப்பாட்டு, வயலின் கலைஞர்கள் இவரிடம் பயின்றவர்கள். மனைவி பூஷணியும் இவர் மாணவியே.

இசை பயிலும் மாணவ - மாணவிகளிடம் ஃபீஸ் எதையும் பெற்றுக் கொள்ளுவதில்லை கல்யாணராமன்.

"ஏன்?"

"பூர்வஜன்ம புண்ணியம் என்று சொல்லுகிறார்களே, அதில் நம்பிக்கை உள்ளவன் நான். இந்தப் பிறவியில் நான் பாக்கியமாகச் சந்தோஷத்தோடு இருப்பது போலவே, அடுத்த பிறவிக்கும் ஏதாவது செய்து புண்ணியத்தைச் சேர்த்துக் கொள்ள வேண்டாமா? அதற்குத்தான்...

"திருவிடைமருதூர் அருகே உள்ள கோமலில் வாழ்ந்த என் கொள்ளுத் தாத்தா முத்து பாகவதர், உஞ்ச விருத்தி பண்ணியே, மருதாநல்லூர் போதேந்திர சுவாமிகள் சித்தியடைந்த இடத்தில் மடம் ஒன்று கட்டியிருக்கிறார். அங்கே உள்ள, தூண்களில் காதை வைத்துக் கொண்டால் ஓம் என்று 'ஒலி' கேட்கும். அவர் ரத்தம் என் உடம்பிலும் ஓடுகிறது.... கச்சேரி வேண்டும் என்று கேட்டு நான் இது வரை யாரிடமும் போய் நின்றதுமில்லை!"

கல்யாணராமனின் வீட்டுப் பூஜை அறையில், போதேந்திர சுவாமிகளின் பாதுகையோடு குரு ஜி.என்.பி.யின் படமும் இருக்கிறது.

**இ**ந்துஸ்தானி இசைக் கலைஞர்கள் அத்தனை பேரையும் ரசிக்கிறவர் கல்யாணராமன். குரல் வளத்தில் அவர்கள் முறையைப் போலவே, தன் இசையையும் வழங்குவதில் சில ஆராய்ச்சிகள் செய்திருக்கிறார். அஷ்டபதிகள் அத்தனைக்கும் கவர்ச்சிகரமான மெட்டுக்கள் அமைத்திருக்கிறார்.

**ல**ண்டன் அகடமி அஃப் ஃபைன் ஆர்ட்ஸ், சென்ற ஆண்டு இவருக்குக் 'கலைமாமணி' பட்டம் வழங்கிக் கௌரவித்தது. அந்த பாரதிதாசன் நூற்றாண்டு விழா கொண்டாட்டத்தில், முழுக் கச்சேரியையும் பாரதிதாசன் பாடல்களைக் கொண்டே வழங்கியது கல்யாணராமனின் சாதனை. "பாவேந்தர் தாசர்கள்" கவனத்துக்குரிய சாதனை.

– சித்தார்த்

# ஐம்பது ஆண்டுகளுக்கு முன்...

## கல்கி ஆகஸ்டு 1, 1942

### மேலே வந்த நீர்மூழ்கி

எங்கும் கனாந்தகாரமான இருட்டு; பிரம்மாண்டமான திமிங்கிலங்கள் 'புஸ்' 'புஸ்' என்று பெருமூச்சு விட்டுக் கொண்டு அசைகின்றன; மனிதனை விழுங்கும் மீன்களும் கொடிய பாம்புகளும் ஜலத்தைக் கிழித்துக் கொண்டு போகின்றன; கத்தி முனை போன்ற பாறைகளும், பாசி பிடித்த கொடிகளும் வழியை மறைக்கின்றன; 'ஆக்டபஸ்' போன்ற ராக்ஷஸ ஜந்துக்கள் அகப்பட்டுக் கொள்வதை விழுங்க ஆயிரம் கைகளையும் விரித்துக் கொண்டு காத்திருக்கின்றன - இப்படிப்பட்ட கோரக் காட்சிகள் நிறைந்த சமுத்திரத்தின் அடியில்தான் நாள் கணக்காக ஸப்மரீன்கள் பிரயாணம் செய்கின்றன. எதிரியின் கப்பல்களையும் நீர்மூழ்கிகளையும் தேடித் துவம்சம் செய்யப் பல பிரிட்டிஷ் ஸப்மரீன்கள் சஞ்சரித்து வருகின்றன. எதிரிக் கடலான் புகுந்த ஸப்மரீன் ஒன்று வெகு காலம் தண்ணீருக்குள் இருந்து விட்டு, ஒரு நாள் நள்ளிரவில் மூச்சுக் காற்று சேகரித்துக் கொள்வதற்காக இதோ ஜலத்திற்கு மேலே வந்திருக்கிறது.




- அட்டைப்பட விளக்கம்

### ஆண்டு விழா

தமிழர் பத்திரிகைக்கு முதல் வயது நேற்றைய தினம் பூர்த்தியாகி, இன்று இரண்டாவது ஆண்டு பிறந்திருக்கிறது. இந்த ஆண்டு விழா நாளில் தமிழ் மக்களுக்கு நமது மனமார்ந்த நன்றியையும் மகிழ்ச்சியையும் தெரிவித்துக் கொள்கிறோம். இரண்டாம் ஆண்டில் ''கல்கி'' மாதம் மும்முறை சஞ்சிகையாக வெளியாகின்றது. இதைச் சாத்தியமாகச் செய்தது, முதல் வருஷத்தில் தமிழர்கள் ''கல்கி''க்கு அளித்த ஒப்பற்ற ஆதரவுதான் என்று சொல்ல வேண்டியதில்லை. இதைப் பற்றி அதிகமாகச் சொல்வது பரஸ்பர உபசாரம் கூறுவதாகவே முடியுமல்லவா? தமிழர்க

### மியாவ் - வ் - வ்!


















ளுடைய அன்புக்கும் ஆதரவுக்கும் எப்போதும் ''கல்கி'' பாத்திரமாக இருக்கும் என்று மட்டும் கூறி நிறுத்துகிறோம். இனிமேல் சிறிது காலத்துக்குப் பிரதி மாதமும் 1உ., 10உ., 20உ. களை நேயர்கள் தயவு செய்து ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும்.

- என்ன சேதி

## சக்திவாய்ந்த ஆயுதம்

அரசியல் போரில் உண்ணாவிரதத்துக் குரிய ஸ்தானத்தைப் பற்றி ஒரு நிருபருக்கு மகாத்மா அளித்திருக்கும் பதிலில் அவர் மனோநிலை ஒருவாறு வெளியாகிறது.



''சத்தியாக்கிரஹத் திட்டத்தில் சாகும் வரை உண்ணாவிரதம் இருப்பது ஒரு முக்கியமான அம்சமென்ற முடிவுக்கு நான் வந்திருக்கிறேன். அது சில குறிப்பிட்ட சந்தர்ப்பங்களில் மிகவும் மகத்தான சக்தி வாய்ந்த ஆயுதம். ஆனால் சரியான பயிற்சி இன்றி அதை எல்லாரும் கையாள முடியாது'' என்று மகாத்மா சென்ற வாரத்து ''ஹரிஜன்'' பத்திரிகையில் எழுதியிருக்கிறார்.

- தலையங்கத்தில் ஒரு பகுதி

## அடுத்த பிரசாரம்!

''ஆடையைக் குறைத்துக் கொள்க!'' என்பது இந்திய சர்க்காரின் அடுத்த பிரசாரமாக இருக்கப் போகிறது.

- 'அமிர்தபஜார்' பத்திரிகை

கடைசியாக, ஒரு காரியத்தில் இந்திய சர்க்கார் மகாத்மாவைப் பின்பற்றப் போகிறார்கள்!

- ஆகாச வெடி



## பெரிய குடும்பம்!

ஒருவர் : என் மனைவி ஒரு பெரிய குடும்பத்திலிருந்து வந்தவள்.

மற்றவர் : அப்படியா? என் மனைவி ஒரு பெரிய குடும்பத்தோடேயே வந்தவள்.

- என்.வி. ராமசாமி.

- காலக்ஷேபம்

## பாரத சக்தியின் வெற்றி



பாரதியார் பாடிக் கொண்டே நிமிர்ந்து விட்டார். குன்றுபோலே!

நாங்களும் கேட்டுக் கொண்டே நிமிர்ந்து விட்டோம், எங்களை அறியாமலே! இன்னும் ஏதோ ஒரு முடிவான அற்புதத்தை எதிர்பார்த்தோம்.

தேவர்கள் பூச் சொரிந்தார்;
- 'ஓம்,
ஜெயஜெய பாரத சக்தி!'
யென்றே,
ஆவலோ டெழுந்து நின்று,
- முன்னை
ஆரிய வீட்டுமன் கைதொழுதான்;
சாவடி மறவ ரெல்லாம் - 'ஓம்,
சக்திசக்தி சக்தி'யென்று,
கரம் குவித்தார்

(வீட்டுமன் : பீஷ்மன்.)

என்று ஜயகோஷம் செய்வது போல் பாடிய போது, சந்திரோதயமாகி விட்டது. எங்கள் உள்ளத்திலும் தெய்விக உத்ஸாகத்தோடு கூடிய நம்பிக்கை உதயமாகிக் கொண்டிருந்தது.

பாரத சக்தியாகிய பாஞ்சாலி பாரத சக்தியாகிய இந்தியாவாக மாறி விட்டாள். பாஞ்சாலி 'புதுப் புதுப் புதுமைகளாய்'த் துகில் வளரப் பெற்றது போல, இழந்த சுதந்திரத்தைப் பாரத அன்னையும் புதுமையாகப் பெற்றுப் புதிய இந்தியாவாக எங்கள் அகக் கண்ணுக்கு இலக்காகி விட்டாள். பழமை விரும்பிகளான பிதவாத பீஷ்மர்களும் ஆவலோடு மெய்மறந்து கை தொழுது நிற்க, உலக வல்லரசுகளெல்லாம் ஒரு புதிய சக்தியாக, ஒரு புதிய வெற்றியாக இந்தியாவை வரவேற்பதாய்க் கனவு கண்டோம். அந்தப் புதிய பாரத சக்தியின் ஆவேசமே பாரதியார் என்றும் உணர்ந்து கொண்டோம்.

அந்தச் சந்திரிகையில் பாரதியாரின் முக மண்டலம் தெய்வ அருள் துலங்க, தேஜோமயமாக விளங்கியது. அந்த முகத்தைப் பார்த்துக் கொண்டே, வெண்கல மணியோசை போல் கணீரென்று ஒலித்த குரலில் கேட்கக் கேட்கத் தெவிட்டாமலிருந்த பாடல்களைக் கேட்டுக் கொண்டு மெய் மறந்திருந்தோம்.

- பி.ஸ்ரீ.

- பாரதி விஜயம் கட்டுரையில் ஒரு பகுதி.

* பி. ஸ்ரீ.



## 6-ம் பக்கம் கிளுக்கம்!
## 12-ம் பக்கத்தில் அவஸ்தை!

## வட்டமேஜை

◆ 'ஜெ'யின் புரட்சிமிகு ஆட்சியில் காக்கிச் சட்டைகள் பாவம், என்ன புண்ணியம் செய்தார்களோ தெரியவில்லை. ஏற்கெனவே 'காவல் நிலையம் குண்டு வைத்துத் தகர்ப்பு', 'போலீஸ்காரருக்கு அரிவாள் வெட்டு', 'விடிய விடியச் சிறைவைப்பு', 'துப்பாக்கியால் சுட்டுக் கொலை' என்று ஏக ராகு காலத்தில் அவதிப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். இந்த நேரத்தில் நீங்களும் தலையங்கம் மூலம் சொடசாக வாரியிருக்கிறீர்கள்! வாரல்கள் நியாயமானது என்பதால் வரவேற்கின்றோம். நெத்தியடிக்கு ஒரு சபாஷ்.
திருச்சி - 1, என். தட்சிணாமூர்த்தி.

◆ சரியான சவுக்கடியாக அமைந்து விட்டது இவ்வாரத் தலையங்கம். இதை விடச் சிறப்பாக தற்போதைய சென்னையின் சூழ்நிலைமையையும் அதற்குக் கொடுக்க வேண்டிய பாதுகாப்பு முறையையும் சொல்ல முடியாது.
சென்னை - 41, சூர்யா.

◆ 'வெற்றிக் களிப்பும்; தோல்வியின் துடிப்பும்' - ஸ்பாயின் அட்டைப்படம் எங்கள் மனத்தைக் கொள்ளை கொண்டு விட்டது!
திருத்தணி, தஞ்சைத் தரணியன்.

◆ விம்பிள்டனுக்குப் பின்னால் உள்ள ஆழமான செய்தியை ஒரு மனோதத்துவக் கட்டுரையாக்கிய, பொன். இளங்கோ என்னை வியக்க வைத்தார்.
பி.பி. குளம், ம. செந்தில்நாதன்.

◆ ''இந்திய ஒலிம்பிக் அணி'' பற்றிய கார்ட்டூன் மனத்துக்குக் கஷ்டமாக இருந்தாலும் ஒலிம்பிக் வளையத்தை வைத்தே நீங்கள் செய்திருந்த நையாண்டியை மிகவும் ரசித்தேன்.
நவாமலை, பி. ஜெயப்பிரகாஷ்.

◆ வெற்றிக் களிப்பும், தோல்வியின் துடிப்பும் பற்றி 6,7 பக்கங்களில் விளக்கிய கல்கி, 12-ம் பக்கம் ஒலிம்பிக் கார்ட்டூன் போட்டு மேற்படி கட்டுரையை அவமரியாதை செய்து விட்டது. முன்னேற்றத்திற்குப் பல தடைகள் இருக்க, வீரர்களைக் கேலி செய்வது அநீதி.
சென்னை - 15, வி. சி. சிவகுமார்.

◆ 26.7.92 தேதியிட்ட கல்கி வெகு ஜோர். ''கவர்ச்சி படுத்தும் பாடு'' முதல் ''பிரிந்த மனங்களைச் சேர்க்கிறார்கள்'' வரை நல்ல கலவையாக இருந்தது. இதழைக் கீழே வைக்க மனம் வரவில்லை.
ஸ்ரீவில்லிபுத்தூர், தேவாம்பாள் ராமசாமி.

◆ கன்சல்டிங் ஃபீஸே அரை நோட்டு (ரூ. 50) வாங்கும் டாக்டர்கள் மத்தியில், ஒரு பைசா கூட வாங்காமல் அறுவை சிகிச்சை செய்யும் டாக்டர் ராஜரத்தினத்தின் சேவை மகத்தானது.
திருமருகல், நா. ரேணுகா.

◆ அரசியல்வாதிகள் மாணவர்களை எவ்வளவு தூரம் கெடுத்திருக்கிறார்கள் என்பதற்குக் கல்லூரித் தேர்தலில் கூட கட்-அவுட் கலாசாரம் புகுந்து இருப்பதே சாட்சி.
பவித்ரமாணிக்கம், ச. தென்றல் இளங்கோ.

◆ சேலம் நகர ரவுண்ட் அப்பில் சேலத்தின் மைனஸ் பாயிண்ட்டுகளையே நிறைய எழுதியிருந்தீர்கள். ஸ்வர்ணபுரி, பேர்லாண்ட்ஸ், குகை, செவ்வாய்பேட்டை போன்ற பகுதிகளுக்கும் ரவுண்ட் அடித்திருக்கலாமே.
சேலம் - 1, கே. ராஜபாபு.

◆ சேலம் நகரச் சிறப்பிதழுக்குச் சிகரம் போல் அமைந்திருந்தன மகளிர் மன்றங்கள், இளைஞர் மன்றங்கள் பற்றிய செய்திகள்.
மேட்டூர் அணை - 2, ஆர். கருணாகரன்.

◆ இதயத்தை 'விசுக்'கென்று கீறி, கண நேரத்தில் எங்களை அப்படியே ஸ்தம்பிக்க வைத்து விட்டது, 'கைநாட்டு' சிறுகதை!
கொரட்டூர், கே. என். ஸ்ரீனிவாசன்.

◆ பெரிய மீன்களுக்காகக் காத்திராமல், வலையில் விழும் சின்ன மீன்களைப் பிடிப்பது போல் தான். காலம் ஒரு நாள் மாறும் என்பதை உணர்ந்து, நேர்மை, நியாயம் கடைப்பிடித்து வேலையில் நடைபோட வேண்டும் என்பதை அருண் தனது ''வலைவீச்சு'' சிறுகதையில் தெளிவுபடுத்தியுள்ளார்.
கீழ்வேளூர், கோ. தியாகராஜன்.

◆ கல்கி 19.7.92 இதழில் ஏற்றுமதி ஸ்பெஷல் என்ற தலைப்பில் வெளியாகியுள்ள செய்தியில் பிளாஸ்டிக் பட்டிகள் உபயோகத்திற்குப் பின் குப்பையாகி, சுற்றுப்புறச் சூழ்நிலையைப் பாதிக்கும் எனக் குறிப்பிடப்பட்டிருப்பது சரியல்ல. பிளாஸ்டிக், பெட்ரோலியம் கச்சா எண்ணெயிலிருந்து சுத்திகரிப்பின் விளைவாகக் கிடைப்பதாலும் அவை தட்டுப்பாடாக இருப்பதாலும் விலை அதிகமானதாலும் அதனை re-process செய்து மீண்டும் உபயோகத்திற்குக் கொண்டு வந்து விடுகிறார்கள். ஆகையால் அவை குப்பையாகிச் சுற்றுப்புறச் சூழ்நிலைப் பாதிப்பு ஏற்படாது. இந்தியாவிலும் இந்த விழிப்புணர்ச்சி படிப்படியாக ஏற்பட்டு வருகிறது.
மயிலாடுதுறை, சிவ. கார்த்திகேயன்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் : ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

# BPL



## உங்கள் வாழ்க்கையின் இணைப்பு பிபிஎல் அஜீத்

இப்பொழுது!
எக்ஸைஸ்
டியூட்டியினால்
குறைக்கப்பட்ட
விலை.




புகழ் பெற்ற பிபிஎல் குரூப் தயாரித்து வழங்கும் பிபிஎல் - அஜீத் ப்ளாக் & ஒயிட் டிவி, கலர் டிவியைப் போன்ற அழகான தோற்றமுடையது. 51 செ.மீ. மற்றும் 36 செ.மீ. அளவுடைய இந்த டிவிகள் எலெக்ட்ரானிக் மற்றும் டர்ரெட் ட்யூனர்களோடு, பல வகையான மாடல்களில் கிடைக்கின்றன. பிபிஎல் அஜீத் தற்பொழுது SMPS நுணுக்கத்தோடு கிடைப்பதால், ஏற்றதாழ்வான வோல்டேஜ் பற்றிய கவலை இனி வேண்டாம். இடைவிடாத செயல்திறனோடு, முழுமையான பாதுகாப்போடு வருவது பிபிஎல் அஜீத். அருகாமையிலுள்ள பிபிஎல் டீலரை அணுகி, பிபிஎல் அஜீத் ப்ளாக் & ஒயிட் டிவியை இன்றே உங்கள் இல்லத்திற்கு எடுத்துச் செல்லுங்கள்.

**ப்ளாக் & ஒயிட் டிவி**



மனதிற்கினிய ஒலி
**பிபிஎல்-அஜீத்தின்**
ஒளி

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka